உ

சிவமயம்

# சீதை திருமணம்



ஆசிரியர் :

கவிச்சக்கரவர்த்தி கம்பர்



தொகுப்பும் விளக்கமும் :

'தமிழ்க்கடல்', 'வண்கவி வள்ளல்',
'சிவமணி', 'சிவம் பெருக்கும் சீலர்'

ராய. சொ.

இராயவரம் ப. வ. ராம.

குழந்தையன் செட்டியார்

மகள்

செல்வி : சீதை

திருமண வெளியீடு

விரோதிகிருது — வைகாசி, 23 (6 - 6 - 71)

18-3

உ

சிவமயம்

வணக்கம்.

என் மகள் செல்வி சீதையின் திருமணத்தில் வெளிவருகின்றது கம்பர்பெருமானின் சீதை திருமணம்.

எங்கள் குடும்பத்தில் சீதை வந்து பிறந்த அன்று, தவத்திரு திருச்சி சுவாமிகளும் எங்கள் குடிலுக்கு வந்து, எங்களை வாழ்த்தினார்கள். அன்று முதல் எங்கள் குடும்பத்தவர்கள் எல்லோரும் அவர்களுக்கு அடியவர்கள்; அவர்களின் பேரன்புக்கும் அருளுக்கும் பாத்திரமானவர்கள். எங்கள் குடும்பத்தில் இருந்த குறைகள் அனைத்தையும் நிறைவுசெய்து வாழ்வித்த மகான், திருச்சி சுவாமிகள். அவர்களின் பாத மலர்களில் இந்த மலரை வைத்து வணங்குகின்றோம்.

இதனைத் தொகுத்து எல்லோரும் பயன்பெறுமாறு வெளியிடுகின்றார்கள் என் அருமைத் தந்தையார், 'வண்கவி வள்ளல்', 'தமிழ்க்கடல்', 'சிவமணி', 'சிவம்பெருக்கும் சீலர்' ராய. சொ. அவர்கள். 'பொய்யாய செல்வத்தே புக்கழுந்தி நாள்தோறும் மெய்யாக் கருதிக் கிடந்தேனை ஆட்கொண்ட' பெரியார் அவர்கள். சைவமும் தமிழும் தழைக்க ஓயாது உழைப்பவர்கள். அவர்களின் இந்தத் தொண்டிற்கு என் உளம் கனிந்த வணக்கம்.

இதனை உருவாக்கி விரைவில் வெளிவர என் தந்தையாருக்கு முழுஉதவி செய்து ஓயாது உழைத்த என் நண்பர் பதுமநாபனுக்கு என் நன்றி.

இதனை மிக விரைவில் அச்சிட்டு அளித்த எங்கள் ஊர் செ. மெ. பழநியப்பனுக்குப் பாராட்டு.

இந்நூல் வெளியீட்டில் மிக்க ஆர்வத்தோடு பணிபுரிந்த என் அருமை நண்பர் பள்ளத்தூர் திரு. சொ. மு. அ. மெ. மு. மெய்யப்ப செட்டியார் மைந்தன் சோலையப்பனுக்கு மனமார்ந்த வாழ்த்து.

இராயவரம்,
24-5-71.

ப. வ. ராம. குழந்தையன் செட்டியார்

18 - 5

உ

சிவமயம்

# சீதை திருமணம்

## நூல் முகம்

கவிச்சக்கரவர்த்தி கம்பர் பெருமான் அருளிய இராம காதையி லுள்ள சீதை திருமணம் குறித்த 208 அரிய பாடலின் தொகுப்பு இந்நூல்.

மிதிலை மாநகரம் இராமபிரானை வரவேற்றது தொட்டு, ஞானத்தின் திருவுருவாகிய சனக மகாராசன் சீதையை இராம பிரானுக்குத் திருமணம் முடித்துக் கொடுத்தது ஈருக, இந்நூல் அமைகின்றது.

மிதிலை மன்னன் தன் மகள் சீதையை இராமபிரானுக்கு மணம் செய்து கொடுத்தது பற்றிய அரிய பாடல்களை இன்று 'எங்கள் சீதை'யின் திருமணத்தில் வெளியிட்டு மகிழ்ச்சியடைகின்றோம்.

என் அருமைப் 'பெரிய குழந்தை', தன் மகள், என் பெயர்த்தி சீதையின் திருமண நினைவாக இந்நூலை வழங்கிப் பெருமை யடைகின்றது.

கவிச்சக்கரவர்த்தியிடம் பெரிதும் ஈடுபாடுடைய என் 'பெரிய குழந்தை' இந்நூலை வெளியிடுவது பொருத்தமுடைத்து.

குணங்களால் உயர்ந்தவர், அருட் செயல்கள் பல புரிபவர், என்றால் பெரிதும் மதிக்கப் பெறுபவர், பெரிய குழந்தையின் உள்ளத்தைப் பெரிதும் ஈர்த்தவர், தேவி அருள் கொண்டு, அவர் குடும்ப நலனுக்கு வழிகோலியவர், பெங்களூர் நகரத்தில் கைலாச ஆசிரமம் கண்டு, அங்கு எழுந்தருளியிருக்கும் பெரியார், திருச்சி சுவாமிகளின் திருவடிகளுக்கு இந்நூலை உரிமையாக்கி, என் குழந்தை பெரும்பேறு அடைகின்றது.

இந்நூல் வெளியீட்டில் மற்ற நூல்களைப் போலல்லாமல் பெரும பங்கு கொண்டு, விரைந்து நூல் வெளியாவதில் பெரிதும் முயன்ற என் மாணாக்கர் பதுமனுபனுக்கு வாழ்த்து.

இதற்குத் தோன்றாத் துணையாக இருந்த ஆண்டவனுக்கு வணக்கம்.

மணமக்களும், என் 'பெரிய குழந்தை'யின் குடும்பமும் எல்லா நலனும் பெற்றுப் பல்லாண்டு பல்லாண்டு வாழ்க ! வளர்க !

காரைக்குடி,
24-5-71,

ராய. சொ.

உ

ஸ்ரீராமஜெயம்

# சீதை திருமணம்

## ஐயனே! ஒல்லை வா!

மைஅறு மலரின் நீங்கி,
'யான்செய்மா தவத்தின் வந்து,
செய்யவள் இருந்தாள்' என்று
செழுமணிக் கொடிகள் என்னும்
கைகளை நீட்டி அந்தக்
கடிநகர், கமலச் செங்கண்
ஐயனை, 'ஒல்லை வா' என்று
அழைப்பது போன்றது அம்மா! 1

---

1. மை அறு மலரின்: குற்றமில்லாத தாமரை மலரை விட்டு. மா: பெரிய. வந்து இருந்தாள்: (என்னிடத்தில்) வந்து அவதரித்திருக்கிருள். செய்யவள்: திருமகள். செழுமணிக் கொடிகள்: பெரிய அழகிய கொடிகள். அந்தக் கடிநகர்: காவலையுடைய அம்மிதிலா நகரமானது. கமலச் செங்கண்ஐயன்: தாமரை மலரை ஒத்த சிவந்த கண்களையுடைய இராமபிரான் ஒல்லை: விரைவில். மிதிலா நகர மதிற்கொடிகள் அசைவது இராமனை, 'சீதையை மணம் புரிய விரைவில் வருவாயாக' என அழைப்பது போல் இருக்கிறது என நயம்பட உரைக்கிருர் கம்பர்.

## மணம் செய்ய வருவாய்

நிரம்பிய மாடத்து உம்பர்
நிரைமணிக் கொடிகள் எல்லாம்,
'தரம்பிறர் இன்மை உன்னி,
தருமமே தூது செல்ல,
வரம்பில்பேர் அழகி னளை
மணம்செய்வான் வருகின் றுன்'என்று,
அரம்பையர் விசும்பின் ஆடும்
ஆடலின், ஆடக் கண்டார். 2

## எழுத ஒண்ணுச் சீதை

ஆதரித்து, அமுதில் கோல்தோய்த்து,
'அவயவம் அமைக்கும் தன்மை
யாது?'எனத் திகைக்கும் அல்லால்,
மதனற்கும் எழுத ஒண்ணுச்
சீதையைத் தருத லாலே,
திருமகள் இருந்த செய்ய
போதுஎனப் பொலிந்து தோன்றும்,
பொன்மதில் மிதிலை புக்கார். 3

---

2. நிரம்பிய: நிறைந்துள்ள. மாடம்: மேல்தளம். உம்பர்: மேலே. நிரை: வரிசை. பிறர் தரம் இன்மை உன்னி: (இராமபிரானைத் தவிர) வேருருவர் தகுதி இல்லாமையை நினைத்து. வரம்பில்: எல்லையில்லாத. பேர் அழகினள் : சிறந்த அழகியான சீதை. அரம்பையர் : தேவமகளிர். விசும்பு : ஆகாயம். ஆடலின் ஆடலைப் போல.

3. ஆதரித்து : விரும்பி. கோல்: எழுதுகோல். அமைக்கும் : சித்திரிக்கும். மதனன் : மன்மதன். ஒண்ணு : முடியாத. செய்யபோது: செந்தாமரை மலர். பொலிந்து : விளங்கி. புக்கார் : புகுந்தார்கள். அமுதிலே எழுது கோலைத் தோய்த்துக்கொண்டு, மன்மதனே சீதையின் பேரெழில் உருவைச் சித்திரிக்க முயன்ருலும் சரிவரத் தீட்ட இயலாது திகைப்பானும்! கதாநாயகியை அறிமுகம் செய்யும் கம்பரின் திறமை எண்ணி எண்ணி இன்புறத் தக்கது.

## மாட நெடுந்தெரு

சொற்கலை முனிவன் உண்ட
சுடர்மணிக் கடலும், துன்னி
அல்கலந்து இலங்கு பல்மீன்
அரும்பிய வானும் போல,
வில்கலை நுதலி னாரும்,
மைந்தரும் வெறுத்து நீத்த
பொன்கலன் கிடந்த மாட
நெடுந்தெரு அதனில் போனார். 4

## ஆடக அரங்கு

நெய்திரள் நரம்பில் தந்த
மழலையின் நிறைந்த பாடல்,
தைவரு மகர வீணை,
தண்ணுமை தழுவித் தூங்க,
கைவழி நயனம் செல்ல,
கண்வழி மனமும் செல்ல,
ஐயநுண் இடையார் ஆடும்
ஆடக அரங்கு கண்டார். 5

---

4. சொல்கலைமுனிவன் : (தமிழுக்கு) இலக்கண நூலைத் தந்த அகத்திய முனிவன். சுடர்மணிக் கடல் : ஒளியையுடைய இரத்தினங்களுக்கு இருப்பிடமான சமுத்திரம். அல்கலந்து துன்னி : இரவு நேரத்தில் பொருந்தி. மீன் : நட்சத்திரங்கள். வில்கலைநுதலினார் : ஒளியையுடைய பிறைச் சந்திரனை ஒத்த நெற்றியையுடைய மகளிர். மைந்தர் : ஆடவர். நீத்த : கழற்றி வீசிய. கலன் : ஆபரணம்.

5. நெய் திரள் நரம்பில் : தேனொழுக்குப் போன்ற திரண்ட வடிவமான யாழ் நரம்பின் இசை போல. மழலையின் : மழலைச் சொற்போல. இயன்ற : பொருந்திய. தைவரு : (கைவிரலால்) தடவி வாசிக்கப்படுகிற. தண்ணுமை : மத்தளம். தழுவி : இசைந்து. தூங்க : ஒலிக்கவும். நயனம் : கண். (ஐய: வியப்பிடைச் சொல்) நுண் இடையார் : நுட்பமான இடையையுடைய மங்கையர். ஆடக அரங்கு : பொன்னால் ஆய நடன சாலை.

## வண்டும் மைந்தர் சிந்தையும்

பூசலின் எழுந்த வண்டு
மருங்கினுக்கு இரங்கிப் பொங்க,
மாசுஉறு பிறவி போல
வருவது போவது ஆகி,
காசுஅறு பவளச் செங்காய்
மரகதக் கமுகு பூண்ட
ஊசலில், மகளிர், மைந்தர்
சிந்தையோடு உலவக் கண்டார். 6

## பொன்னி அன்ன ஆவணம்

வரப்புஅறு மணியும், பொன்னும்,
ஆரமும், கவரி வாலும்
சுரத்திடை அகிலும் மஞ்ஞைத்
தோகையும், தும்பிக் கொம்பும்,
குரப்புஅணை நிரப்பும் மள்ளர்
குவிப்புற, கரைகள் தோறும்
பரப்பிய பொன்னி அன்ன
ஆவணம் பலவும் கண்டார். 7

---

6. பூசலின் : ஆரவாரத்துடன். மருங்கு : இடை. பொங்க : ஒலிக்க. மாசு உறு : குற்றம் மிகுந்த. காசு அறு : குற்றமற்ற. மரகதக் கமுகு : மரகதமணி போலப் பசுமை நிறமுள்ள பாக்கு மரங்கள். பூண்ட : பூட்டப்பட்டுள்ள. ஊசலின் : ஊஞ்சல்களிலே. பிறப்புக்கும் ஊசலுக்கும் ஒப்புமை கூறப்படும் கவிநயம் மிக்க அழகுடைத்து.

7. வரப்பு அறு : அளவில்லாத. மணி : இரத்தினம். ஆரம் : முத்து. கவரி வாலும் : கவரி மானின் வாலும். சுரம் : காடு. அகில் : அகிற்கட்டைகள். மஞ்ஞை : மயில். தும்பிக்கொம்பு : யானைத் தந்தம். குரம்பு : வரப்பு. அணை : கரை. மள்ளர் : உழவர். குவிப்புற : குவித்துவைக்க. பரப்பிய : பரவச் செய்கிற. பொன்னி : காவிரிநதி. ஆவணம் : கடைகள்.

## தெள் விளிப்பாணித் தீம்தேன்

வள்உகிர்த் தளிர்க்கை நோவ
மாடகம் பற்றி, வார்ந்த
கள்ளன நரம்பு வீக்கி,
கையொடு மனமும் கூட்டி,
வெள்ளிய முறுவல் தோன்ற,
விருந்துஎன, மகளிர் ஈந்த
தெள்விளிப் பாணித் தீம்தேன்
செவிமடுத்து, இனிது சென்றார். 8

## சுழன்றோடும் குதிரைகள்

கொட்புறு கலினப் பாய்மா,
குலால்மகன் முடுக்கி விட்ட
மட்கலத் திகிரி போல,
வயின்வயின் வருவ, மேலோர்
நட்பினின் இடைய றுவாய்,
ஞானிகள் உணர்வின் ஒன்றாய்,
கட்புலத்து இனைய என்று
தெரிவுஇல, திரியக் கண்டார். 9

---

8 வள் உகிர் : கூர்மையான நகங்கள். மாடகம் : வீணையின் முறுக் காணி. பற்றி : பிடித்துத் திருகி. வார்ந்த : ஒழுகுகின்ற. கள்: தேன் ஒழுக்கு. வீக்கி : இறுகக்கட்டி. கையொடு மனமும் கூட்டி : (அந்நரம்புகளின் மேல் வருடச் செல்லுகின்ற). கைவிரல் களின் குறிப்புடனே மனத்தையும் பதிய வைத்து. தெள்விளிப் பாணித் தீம்தேன் : தெளிவான இசையோடு கூடிய பாட்டாகிய இனிப்புள்ள தேனை. மடுத்து : பருகி.

9. கொட்புறு : சுழன்றோடுதல் மிகுந்து. கலினப்பாய்மா : கடிவாளம் பூண்டு பாய்ந்து செல்லும் தன்மையுள்ள குதிரைகள். குலால் மகன் : குயவன். மட்கலத்திகிரி : மண்ணால் செய்யப்படும் பாத்திரங்களுக்குத் துணைக் கருவியாகிய சக்கரம். வயின் வயின்: இடங்கள் தோறும். நட்பினின் : சிநேகிதத்தைப் போல. கண் புலத்து இனைய : கண்ணின் பார்வைக்கு இத்தன்மையன என்று.

## சாளரத்தில் சந்திரோதயம்

வாளரம் பொருத வேலும்,
மன்மதன் சிலேயும், வண்டின்
கேளொடு கிடந்த நீலச்
சுருளும்,செங் கிடையும் கொண்டு,
நீள்இரும் களங்கம் நீக்கி,
நிரைமணி மாட நெற்றிச்
சாளரம் தோறும் தோன்றும்
சந்திர உதயம் கண்டார். 10

## அன்னம் நடை தோற்றது

பாகுஒக் கும்சொல் பைங்கிளி
யோடும் பலபேசி,
மாகத்து உம்பர் மங்கையர்
நாண, மலர்கொய்யும்
தோகைக் கொம்பின் அன்னவர்க்கு
அன்னம் நடைதோற்றுப்
போகக் கண்டு, வண்டுஇனம்
ஆர்க்கும் பொழில்கண்டார். 11

---

10. வாள் அரம் பொருத : அரம் என்னும் வாளினல் அராவப்பட்ட. சிலே : வில். கேள் : இனம். நீலச் சுருள் : நீலரத்தினச் சுருள். செங்கிடை : உதடு. நீள் இரும் களங்கம் : நெடுங் காலமாக உள்ள களங்கம். சாளரம் : பலகணிவாயில். தெருவில் நிகழும் நிகழ்ச்சிகளைக் காண்பதற்காக உப்பரிகை மேல் பலகணி தோறும் நிற்கின்ற மகளிரது முகங்களின் தோற்றம், ஒளி மழுங் காது களங்கமற்றுப் பல சந்திரர்கள் உதித்துத் தோன்றியது போல் இருந்தது என நயம்பட நவில்கிருர் கம்பநாடர்.

11. பாகுவுக்கும்: சருக்கரைப் பாகைப் போன்ற. பைங்கிளி : பச்சைக் கிளி. மாகத்து : பெரிய ஆகாயத்தின் மீது. உம்பர் மங்கையர் : தெய்வப்பெண்கள். தோகை கொம்பின் அன்னவர் : (சாயலில்) மயிலேயும், (மெல்லிய உருவில்) பூங்கொம்பையும் ஒத்த மாதர்கள். இனம் : கூட்டம். ஆர்க்கும் : ஆரவாரம் செய்யும். பொழில் : சோலே. இயற்கையில் ஆரவாரம் செய்யும் வண்டுகளை அன்னம் மகளிர்க்கு நடைதோற்றுப் போனதற்காக ஆரவாரிப்பன போலும் என்கிருர் கவிஞர்கோ.

## செஞ்சொற் கவி இன்பம்

பொன்னின் சோதி, போதினின்
நாற்றம், பொலிபூவின்
தென்உண் தேனின் தீம்சுவை,
செஞ்சொற் கவிஇன்பம்,
கன்னிம் மாடத்து உம்பரின்
மாடே, களிபேடோடு
அன்னம் ஆடும் முன்துறை
கண்டுஅங்கு அயல்நின்ருள். 12

## ஒப்பு எங்கே

செப்பும் காலே, செங்கம-
-லத்தோன் முதல்யாரும்
எப்பெண் பாலும் கொண்டுஉவ
மிப்போர் உவமிக்கும்,
அப்பெண் தானே ஆயின
போதுஇங்கு அயல்வேறுஓர்
ஒப்புஎங் கே,கொண்டு எவ்வகை
நாடி, உரைசெய்வேம் ? 13

---

12. சோதி : ஒளி. போது : பூ. நாற்றம் : மணம். தென் : வண்டு கள். கன்னி மாடம் : கன்னியா மாடம். உம்பரின் மாடே : மேலிடத்திலே. களிபேடோடு : மகிழ்ச்சியுள்ள பெட்டை அன்னங்களோடு. முன்துறை : இடத்திற்கு முன்புறம். கன்னி மாடத்தின் மேலிடத்தில் அன்னம் ஆடும் துறை கண்டு, பொன்னின் ஒளியும், பூவின் நறுமணமும், தேனின் தீஞ் சுவையும் செஞ்சொற்கவி இன்பமும் ஒருங்கே உருவெடுத்தது போன்ற சீதை நின்ருள்.

13. செப்பும் காலே : (இச்சீதைக்கு உவமை) சொல்லப் புகுமிடத்து. செங்கமலத்தோன் : தாமரை மலரில் வாழ்கின்ற பிரமதேவன். உவமிக்கும் அப்பெண் : உவமையாக எடுத்துச் சொல்கின்ற அத் திருமகள். நாடி : தேடி. எல்லாப் பெண்களுக்கும் யாவராலும் உவமானமாக எடுத்துச் சொல்லப்படுகிற இலக்குமியே இங்கு சீதையாக அவதரித்திருத்தலால் இவளுக்கு உவமை சொல்ல வேருெரு பொருள் இல்லை என இயம்புகிருர் கம்பநாடார்.

## இரு கண்ணால் அமையாது

உமையாள் ஒக்கும்; மங்கையர்
உச்சிக் கரம்வைக்கும்
கமையாள் மேனி கண்டவர்,
காட்சிக் கரைகாணார்.
'இமையா நாட்டம் பெற்றிலம்'
என்றார்; 'இருகண்ணால்
அமையாது' என்றார்; அந்தர
வானத் தவர்எல்லாம். 14

## இம்பர் அளிக்கும் அமுது

வென்றுஅம் மானை, தார்அயில்
வேலும் கொலைவாளும்
பின்ற, மானப் பேர்கயல்
அஞ்ச, பிறழ்கண்ணாள்
அன்றுஅவ் வானத்து உம்பர்
அளிக்கும் அமுதுஅன்றி,
இன்றுஇம் மாடத்து இம்பர்
அளிக்கும் அமுதுஒத்தாள். 15

---

14. உமையாள் : பார்வதி. ஒக்கும் : போன்ற. உச்சிக்கரம் வைக்கும் : தலைமேல் கைகளை வைத்துக் கூப்பும். கமையாள் : பொறுமைக் கிருப்பிடமான சீதை. காட்சிக் கரை: (அழகு) காட்சியின் எல்லை. அமையாது : முடியாது. அந்தரம் : மேலுலகம். சீதையின் பேரெழிலைக் காணும் மண்ணுலகத்தோர் இமையாக் கண்கள் இல்லையே என ஏங்குவர்; வானவர்களோ இமையா நாட்டம் இரண்டு தானே பெற்றோம் எனக் குறைபட்டனர் என்பது திரண்ட பொருள்.

15. அம்மானை வென்று : அழகிய மானை (பார்வையிலே) செயித்து. தார் அயில் வேலும் கொலை வாளும் பின்ற : வெற்றி மாலையை அணிந்த கூர்மையையுடைய வேலாயுதமும், கொலைத் தொழில் பயின்ற வாளாயுதமும் (உவமையாகாமல்) பின்னிடும்படி. மானம் பேர்கயல் : சிறப்பையுடைய பெரிய கயல் மீன்களும். பிறழ் : சுழல்கின்ற. அன்று : (பாற்கடல் கடைந்த) அந்நாளில். இம்பர் : இவ்வுலகோர்.

## நோற்ருர் யார் கொலோ ?

மலர்மேல் நின்றுஇம் மங்கைஇவ்
வையத் திடைவைக,
பலகா லும்தம் மெய்நனி
வாடும் படிநோற்ருர்
அலகோ இல்லா அந்தண-
ரோ?நல் அறமேயோ ?
உலகோ? வானே? உம்பர்கொ-
லோ?ஈது உணரேமால் ! 16

## அன்னே ! அடிபோற்றி !

தன்நேர் இல்லா மங்கையர்,
'செங்கைத் தளிர்மானே !
அன்னே! தேனே! ஆர்அமிழ்-
தே!என்று அடிபோற்றி,
முன்னே, முன்னே, மொய்ம்மலர்
தூவி, முறைசார,
பொன்னே சூழும் பூவின்
ஒதுங்கிப் பொலிகின்ருள். 17

---

16. மலர் மேல் நின்று : செந்தாமரை மலரின் மேலிடத்திலிருந்து. இம்மங்கை : இத்தகைய சீதை. வைக : தங்க. மெய் : உடம்பு. நனிவாடும்படி : மிகவும் வாட்டமடையும்படி. நோற்ருர் : தவம் செய்தவர்கள். அலகோ : அளவோ. விண்ணேர், மண்ணேர் முதலியோரும், நல்லறமும் வருந்திச்செய்த தவத்தின் பயனுகவே சீதை அவதரித்தாள் என்பது கருத்து.

17. தன்நேர்இல்லா: தமக்கு உவமையற்ற. மானே: மான்போன்ற வளே. அன்னே: தாயே. போற்றி: ஏத்தி. முன்னே முன்னே: (சீதை திருவடிவைக்கும்) முன்னிடங்களிலெல்லாம். மொய்ம் மலர்: செறிந்த பூக்கள். முறைசார: முறையே செல்ல. பொன்னே : பொன்போலும். பொலிகின்ருள் : விளங்குகின்ருள்.

### சதகோடி மின்சேவிக்கும் மின்அரசு

பொன்சேர் மென்கால் கிண்கிணி,
ஆரம், புனைஆரம்,
கொன்சேர் அல்குல், மேகலை,
தாங்கும் கொடிஅன்னார்
தன்சேர் கோலத்து இன்எழில்
காண, சதகோடி
மின்சே விக்க மின்அரசு
என்னும் படிநின்றாள். 18

### பெண் கனி

'கொல்லும் வேலும் கூற்றமும்
என்னும் இவைஎல்லாம்
வெல்லும் வெல்லும்' என்ன
மதர்க்கும் விழிகொண்டாள்;
சொல்லும் தன்மைத்து அன்றுஅது;
குன்றும், சுவரும்,திண்
கல்லும் புல்லும் கண்டுஉரு-
-கப்பெண் கனிநின்றாள். 19

---

18. பொன்சேர்: பொன்னாலான. மென்கால்: மெல்லிய பாதங்கள். ஆரம்: அரதனமாலை. புனைஆரம்: சூடும் பூ மாலைகள். கொன்சேர்: சிறப்பு வாய்ந்த. கொடி அன்னார்: கொடிகள் போன்ற சேடியர். தன்சேர்: தன்னிடம் பொருந்திய. கோலம்: அலங்காரம். சதகோடிமின் : நூறுகோடி மின்னல்கள். சேவிக்க : குற்றேவல் செய்ய.

19. கொல்லும் : கொலைவல்ல. மதர்க்கும் விழிகள் : களிப்புள்ள கண்கள். தன்மைத்து : தன்மையையுடையது. குன்றும் : மலைகளும். திண் கல் : வலிய கற்கள். பெண்கனி : பெண்ணுருக் கொண்ட கனிபோன்ற சீதை. அசையாப் பொருள்களும் சீதையின் எழில் நலம் கண்டு உருகுமாம்!

## அழகும் அழகுபெற்றதே!

இழைகளும் குழைகளும்
இன்ன, முன்னமே
மழைபொரு கண்இணை
மடந்தை மாரொடும்
பழகிய எனினும்,இப்
பாவை தோன்றலால்,
அழகுஎனும் அணியும்ஓர்
அழகு பெற்றதே. 20

## அண்ணலும் அவளும்

எண்ணஅரு நலத்தினள்
இனையள் நின்றுழி,
கண்ணொடு கண்இணை
கவ்வி, ஒன்றைஒன்று
உண்ணவும், நிலைபெறாது
உணர்வும் ஒன்றிட,
அண்ணலும் நோக்கினன்;
அவளும் நோக்கினள். 21

---

20. இழை : கழுத்திலணியும் ஆரம் போன்ற அணி. குழை : காதணி. மழை பொருகண் இணை மடந்தைமார் : மழையை ஒத்துக் குளிர்ந்த கண்ணிணையுடைய மகளிர். பாவை: (இங்கே) சீதை. அணிகலன்களுக்கும், அழகுக்குமே அழகு அளிக்கும் பேரழகி சீதை எனச் சிறப்புறச் சித்திரிக்கிறார் கம்பர் பெருமான்.

21. எண்ண அரு : நினைத்தற்கும் அரிய. நலம் : அழகு. இனையள்: இவ்வாறாய். நின்றுழி : நின்றபொழுது. நிலைபெறாது : நிலைத் திராமல். அண்ணல் : இராமன். அவள் : சீதை. இருவரது கண்ணிணைகளும் ஒன்றை ஒன்று கவர்ந்து பற்றிக்கொண்டு அனுபவித்தன. 'கண்ணொடு கண்ணிணை நோக்கு ஒக்கின் வாய்ச் சொற்கள் என்ன பயனுமில' என்பார் வள்ளுவர்.

## செங்கண் தைத்த

நோக்கிய நோக்குஎனும்
நுதிகொள் வேல்இணை
ஆக்கிய மதுகையான்
தோளின் ஆழ்ந்தன;
வீக்கிய கழல்
வீரன் செங்கணும்
தாக்குஅணங்கு அனையவள்
தனத்தில் தைத்தவே. 22

## மாறிப்புக்கு இதயம் எய்தினர்

பருகிய நோக்குஎனும்
பாசத் தால்பிணித்து,
ஒருவரை ஒருவர்தம்
உள்ளம் ஈர்த்தலால்,
வரிசிலை அண்ணலும்
வாட்கண் நங்கையும்
இருவரும் மாறிப்புக்கு
இதயம் எய்தினர். 23

---

22. நோக்கு எனும் நுதி கொள் வேல் இணை: (சீதையின்) பார்வையாகிய கூரிய வேல் இணைகள். ஆக்கிய மதுகையான்: வளர்ந்த வலிமையையுடைய இராமன். வீக்கிய கழல்: ஒலிக்கும் வீரக் கழல் கட்டிய. வீரன்: இராமன். தாக்கு அணங்கு அனையவள்: மோகினித் தெய்வம் போன்ற சீதை.

23. பருகிய: பருகுவதுபோல விழுங்கிநின்ற. பாசம்: கயிறு. பிணித்து: கட்டப்பெற்று. ஈர்த்தலால்: இழுத்து நின்றதால். வரிசிலை அண்ணல்: கட்டமைந்த வில்லினையுடைய இராமன். வாள் கண் நங்கை: வாள் போன்ற கண்ணுடைய சீதை. மாறிப் புக்கு: (ஒருவர் மனத்துள் ஒருவர்) மாறிப் புகுந்து.

## பிரிந்தவர் கூடினர்

மருங்கிலா நங்கையும்
வசைஇல் ஐயனும்
ஒருங்கிய இரண்டுஉடற்கு
உயிர்ஒன்று ஆயினர் ;
கருங்கடல் பள்ளியில்
கலவி நீங்கிப்போய்ப்
பிரிந்தவர் கூடினல்,
பேசல் வேண்டுமோ ? 24

## ஓவியப் பாவை

அந்தம்இல் நோக்குஇமை
அணைகி லாமையால்,
பைந்தொடி, ஓவியப்
பாவை போன்றனள் ;
சிந்தையும் நிறையும்மெய்ந்
நலனும் பின்செல,
மைந்தனும், முனியொடு
மறையப் போயினன். 25

---

24. மருங்கிலா: இடை உறுப்புத் தோன்ருத. நங்கை: சீதை. வசை இல் : பழியற்ற. ஒருங்கிய : ஒற்றுமைப்பட்ட கருங்கடல் பள்ளி : திருப்பாற்கடற்பள்ளி. அதனினின்று பிரிந்தவர் இப் போதுஒருவரையொருவர் காண நேர்ந்ததால், ஏற்பட்ட காதற் பெருக்கு அளவிட முடியாதது என்பது கருத்து.

25. அந்தம் இல் : எல்லையற்ற. நோக்கு : பார்வை. இமை அணை கிலாமையால்: (கண்) இமையாது பார்த்துக்கொண்டே இருந்த லால். பைந்தொடி: பசும் பொன்னுலாகிய தொடி என்னும் வளையையுடைய பிராட்டி. ஓவியப் பாவை: சித்திரப் பதுமை. நிறை : மன உறுதி. மெய்நலன் : உடலழகு. பின்செல : பின்னே தொடருமாறு. மைந்தன்: இராமன். முனி: விசுவாமித்திர முனிவர். மறையப் போயினன்: (கண்) மறையச் சென்றன்.

## அங்குசம் நிமிர்ந்தது

பிறைஎனும் நுதலவள்
பெண்மை என்படும் ?
நறைகமழ் அலங்கலான்
நயன கோசரம்
மறைதலும், மனம்எனும்
மத்த யானையின்
நிறைஎனும் அங்குசம்
நிமிர்ந்து போயதே. 26

## பால்உறு பிரை

மால்உற வருதலும்,
மனமும் மெய்யும்,தன்
நூல்உறு மருங்குல்போல்
நுடங்கு வாள்;நெடுங்
கால்உறு கண்வழிப்
புகுந்த காதல்நோய்,
பால்உறு பிரைஎன,
பரந்தது எங்குமே. 27

---

26. பிறை எனும் நுதலவள் : பிறைச்சந்திரனை ஒத்த நெற்றியை யுடைய சீதை. என்படும் : என்ன நிலைமையை அடையக்கூடும். நறை கமழ் அலங்கலான் : தேன் மணம் கமழும் மாலையை அணிந்த இராமன். நயன கோசரம் : கண்ணின் பார்வை. மத்த யானை : மதம் பிடித்த யானை. நிறை : உறுதிப்பாடு. அங்குசம்: தோட்டி.

27. மால் உற வருதலும் : ஆசை மிகுதியாகத் தோன்றுதலும். நூல் உறு மருங்குல் : நூலிழையை ஒத்த இடை. நுடங்குவாள்: தளர்வாள். நெடுங்கால் உறு : நீண்ட கருங்கண்களின் மூலம் உட்புகுந்த. பால்உறு பிரை : பாலிற் சேர்ந்த பிரைத்துளி. பாலினுள் சேர்ந்த சிறிதளவு உறைமோர் பால் முழுதையும் திரித்து மாற்றுவது போல, சிற்றுறுப்பான கண்களின் வழிப் புகுந்த காதல் நோய் உடலைத் திரித்து மாற்றியது என்பது கருத்து.

### வழங்கிய கடல்

தழங்கிய கலைகளும்,
நிறையும், சங்கமும்
மழுங்கிய உள்ளமும்,
அறிவும், மாமையும்
இழந்தவள் இமையவர்
கடைய, யாவையும்
வழங்கிய கடல்என
வறியள் ஆயினள். 28

### அமளி சேர்த்தினர்

காதொடும் குழைபொரு
கயற்கண் நங்கைதன்
பாதமும் கரங்களும்
அனைய பல்லவம்
தாதொடும் குழையொடும்
அடுத்த, தண்பனிச்
சீதநுண் துளிமலர்
அமளி சேர்த்தினர். 29

---

28. தழங்கிய : ஒலிக்கும். கலைகளும்: மேகலை அணியையும். சங்கமும்: சங்கிலான வளையல்களையும். மழுங்கிய : வாட்டமடைந்த. மாமை: உடம்பின் பளபளப்பு. வறியள்: (ஒன்றுமில்லாத) வறுமை நிலையள். பாற்கடல் தன்னிடமுள்ள பொருள்களனைத்தையும் கொடுத்துவிட்டது போல் சீதை தன்னிடமுள்ள அணிகள், பண்பியல்புகள் அத்தனையையும் இழந்துவிட்டாள்!

29. குழைக்காதொடும் பொருகயல்கண் நங்கை: குழை என்னும் நகையை அணிந்த காதுடனே பொருந்திய கயல் மீன் போன்ற பிறழும் கண்ணினை உடைய சீதை. பாதம் : திருவடி. கரம் : கை. அனைய : ஒத்த. பல்லவக் குழை : பல்லவம் ஆகிய தளிர்கள். அடுத்த : பொருந்திய. தண்பனி சீதம்: மிகக் குளிர்ச்சியான பனி நீர். மலர் அமளி : பூப்படுக்கை.

### மென்மலர்க் கொம்பு

கம்பம்இல் கொடுமனக்
கான வேடன்கை
அம்பொடு சோர்வதுஓர்
மயிலும் அன்னவள்
வெம்புறு மனத்துஅனல்
வெதுப்ப, மென்மலர்க்
கொம்புஎன அமளியில்
குழைந்து சாய்ந்தனள். 30

### பல்லவங்கள் கரிந்தன

சொரிந்தன நறுமலர்
சுறுக்கொண்டு ஏறின ;
பொரிந்தன கலவைகள்,
பொறியின் சிந்தின ;
எரிந்தவெங் கனல்சுட,
இழையில் கோத்தநூல்
பரிந்தன; கரிந்தன
பல்ல வங்களே. 31

---

30. கம்பம் இல் : திகைத்தலில்லாத. கானம் : காடு. சோர்வது: தளர்வது. வெம்புறுமனத்து : கொதிக்கிற மனத்தில். அனல் : நெருப்பு. வெதுப்ப: எரிப்பதனால். அமளி: படுக்கை. குழைந்து: வாடி. வேடன் அம்பினால் எய்யப்பட்ட மயில் பறவை தளர்ந்து வீழ்வதுபோல, சீதை மன்மதனின் மலர்க்கணையால் அடிபட்டுச் சோர்ந்து படுக்கையில் வீழ்ந்தனள் என்பது கருத்து.

31. சொரிந்தன நறுமலர்: (படுக்கையாக) பரப்பப்பட்டுள்ள வாசனை மலர்கள். சுறுக்கொண்டு ஏறின : கூர்மையாய் (உடம்பில்) தைத்தன. பொரிந்தன கலவைகள் : கலவைச் சந்தனங்கள் பொரிந்து போயின. பொறியின் சிந்தின: நெருப்புப் பொறிகள் போல் உதிர்ந்தன. எரிந்த : எரிகிற. வெம்கனல் : வெம்மையான (காம) தீ. இழையில் கோத்தநூல்: அணிகலங்களிற் கோக்கப் பட்டுள்ள நூல்கள். பரிந்தன: அற்று நீங்கின. பல்லவங்கள்: தளிர்கள். கரிந்தன: கருகிப் போயின.

## வில்லோடு இழி மேகம்

அல்லினை வகுத்ததுஓர்
அலங்கற் காடுஎனும் ;
வல்எழு; அல்லவேல்,
மரக தப்பெருங்
கல்எனும் இருபுயம் ;
கமலம் கண்எனும் ;
வில்லொடும் இழிந்ததுஓர்
மேகம் என்னுமால். 32

## காமன் அல்லனே

நெருக்கிஉள் புகுந்து,அரு
நிறையும் பெண்மையும்
உருக்கினன் உயிரொடும்
உண்டு போனவன்,
பொருப்புஉறழ் தோள்புணர்
புண்ணி யத்தது
கருப்புவில் அன்று;அவன்
காமன் அல்லனே! 33

---

32. *அல்லினை வகுத்தது ஓர் : (இராமனது மயிர்முடி) இருளைக் கொண்டு ஆக்கப்பட்டதொரு. அலங்கல் காடு : பூமாலைக்காடு. வல் எழு: வலிய தூண்கள். மரகதப் பெருங்கல் : மரகதப் பெருமலை. புயம் : தோள். கண் கமலம் எனும் : கண்கள் செந்தாமரை மலர் என்பாள். இழிந்தது : (பூமியிலே) இறங்கினது. இராமன் திரு அவயவங்களை எண்ணி எண்ணிக் காமநோயில் அவதியுறுகிறாள் சீதை.*

33. *உள் புகுந்து : மனத்தினுள்ளே வந்து சேர்ந்து. அருநிறை: அழித்தற்கரிய மன உறுதி. உயிரொடும் உண்டு போனவன்: உயிரைக் கவர்ந்துகொண்டு சென்றவன். பொருப்பு உறழ்: மலையோடு மாறுபடுகிற. புணர் : சேர்ந்த. காமன் : மன்மதன். இராமனது கட்டழகைக் கண்டு "இவன் மாரனோ? என்று முதலில் ஐயுற்று, பிறகு கையில் கரும்புவில் அன்றி, மூங்கில் வில்லையல்லவா தாங்கியிருக்கிறான்; எனவே மன்மதன் அல்லன்" என்று சீதை தெளிகிறாள்.*

## கண்வழி நுழையும் கள்வன்

பெண்வழி நலனொடும்,
பிறந்த நாளொடும்,
எண்வழி உணர்வும்,நான்
எங்கும் காண்கிலேன்;
மண்வழி நடந்து,அடி
வருந்தப் போனவன்
கண்வழி நுழையும்ஓர்
கள்வ னேகொலாம்? 34

## உயிர் உண்ட முறுவல்

இந்திர நீலம்ஒத்து
இருண்ட குஞ்சியும்,
சந்திர வதனமும்
தாழ்ந்த கைகளும்,
சுந்தர மணிவரைத்
தோளு மேஅல;
முந்திஎன் உயிரைஅம்
முறுவல் உண்டதே. 35

---

34. பெண்வழி : பெண்ணிடத்து இயல்பாக உள்ள. நலன் : அழகு. பிறந்த: உடன்தோன்றிய. எண்வழி உணர்வும் : மனத்திலுள்ள அறிவையும். அடி வருந்த மண்வழி நடந்து போனவன் : திருவடிகள் வருந்துமாறு தரையிலே நடந்துசென்ற இராமன். கண்வழி: கண்களின் வழியாக. கண்ட கண்வழிபுகுந்து கரந்துசெல்லவல்ல விசித்திரக் கள்ளன் இராமன் எனப் பேசுகிறாள் சீதை.

35 இந்திர நீலம் : (கறுத்த நிறமாகவுள்ள) இந்திர நீல இரத்தினம். குஞ்சி : மயிர் முடி. வதனம் : முகம். சுந்தரமணிவரைத்தோள்: அழகிய இரத்தின மலைகள் போன்ற தோள்கள். முறுவல் : புன்சிரிப்பு. 'இராமனின் மயிர்முடி முதலியன என் உயிரை உண்டவாயினும் முற்பட்டு உயிரை உண்டது அன்னானின் புன் முறுவலே' என்று சீதை இராமனது உருவத்தை எண்ணி எண்ணி ஏங்குகிறாள்.

### யானை நடை

படர்ந்துஒளி பரந்துஉயிர்
பருகும் ஆகமும்,
தடந்தரு தாமரைத்
தாளு மேஅல;
கடந்தரு மாமதக்
களிநல் யானைபோல்
நடந்தது, கிடந்தது,என்
உள்ளம் நண்ணியே. 36

### கன்னி மாமதில் எறிந்த குமரன்

பிறந்துடை நலம்நிறை
பிணித்த எந்திரம்,
கறங்குபு திரியும்என்
கன்னி மாமதில்
எறிந்தஅக் குமரனை,
இன்னும் கண்ணிற்கண்டு,
அறிந்து,உயிர் இழக்கவும்
ஆகு மேகொலாம்? 37

36. படர்ந்து ஒளி பரந்து : விசாலமாய் ஒளிபரவி. ஆகம் : மார்பு. தடம்தரு: பெருமையைக் கொண்ட. தாள்: திருவடி. கடம் தரு மாமதக் களிநல் யானை: கன்னத்திலிருந்து சுரக்கின்ற மிக்க மதநீர் பெருகப் பெற்ற மிக்க களிப்புடைய சிறந்த ஆண்யானை. நண்ணி : பொருந்தி. இப்பொழுது இராமனின் நடையழகை எண்ணி மனத்தை அதில் பதியவைக்கிறாள்.

37. பிறந்து (என்னுடன் கூடவே) பிறந்து. பிணித்த எந்திரம் : கட்டமைந்த எந்திரம். கறங்குபு திரியும் : சுழன்று திரிவதற்கிட மான. கன்னிமாமதில் : கன்னித் தன்மையாகிய பெரிய மதில். எறிந்த : அழித்துச் சென்ற. குமரன்: (இங்கே) இராமன் "நான் கண்ட அம் மைந்தனை மணந்து அணைந்து புணர்தல் கூடாவிட்டா லும், இன்னொருமுறை கண்ணாரக் கண்டு களித்தபின் என் உயிர் போவதானாலும் எனக்கு உடன்பாடே" என்று வேண்டுகிறாள் சீதை.

### அந்திமாலை நிறத்தான்

கடலோ? மழையோ? முழுநீலக்
கல்லோ? காயா நறும்போதோ?
படர்பூங் குவளை நாள்மலரோ?
நீலோற் பலமோ? பானலோ?
இடர்சேர் மடவார் உயிர்உண்பது
யாதோ? என்று தளர்வாள்முன்
அடல்சேர் தாரான் நிறம்போலும்
அந்தி மாலை வந்ததுவே! 38

### நிரம்பிய நீல நிறம்

ஆலம் உலகில் பரந்ததுவோ?
ஆழி கிளர்ந்த தோ? அவர்தம்
நீல நிறத்தை எல்லோரும்
நினைக்க, அதுவாய் நிரம்பியதோ?
காலன் நிறத்தை அஞ்சனத்தில்
கலந்து குழைத்து, காயத்தின்
மேலும், நிலத்தும் மெழுகியதோ?
விளைக்கும் இருளாய் விளைந்ததுவே! 39

---

38. கடல் : கருங்கடல். மழை : காளமேகம். முழுநீலக்கல் : சிறந்த பெரிய இந்திரநீலமலை. காயா நறும்போது : காயா மரத்தின் வாசனையுள்ளபூ. பானல் : கருநெய்தல் மலர். இடர் : துன்பம். மடவார்: இளம் பெண்கள். தளர்வாள் : தளர்பவளாகிய சீதை. அடல் சேர்: வலிமை பொருந்திய. அந்திமாலை: அந்திப் பொழுது.

39. ஆலம், (பாற்கடலிலிருந்து வெளியிடப்பட்ட) ஆலாலம் என்னும் கொடியவிடம். ஆழி : கடல். கிளர்ந்ததோ : பொங்கி வந்ததோ. அவர்: (இங்கே) இராமன். நிரம்புதல் : வியாபித்தல். காலன்: (கருநிறமுள்ள) யமன். அஞ்சனம் : மை. காயம் : வானம். விளைக்கும்: (காதலில் தனிப்பட்டவர்க்குத் துன்பத்தை) உண்டாக்குகிற. கருநிறப் பொருள்களெல்லாம் சேர்ந்து இருளாகி, இராமன் திரு நிறம் காட்டிச் சீதையைத் துன்புறுத்துகின்றனவாம்!

## இரவைப் பகல் செய்தார்

ஆண்டு,அங்கு அனையாள் இனையநினைந்து
அழுங்கும் எல்லை, அகல்வானம்
தீண்ட நிமிர்ந்த பெருங்கோயில்,
சீத மணியின் வேதிகைவாய்
நீண்ட சோதி நெய்விளக்கம்,
'வெய்ய' என்றுஅங்கு அவைநீக்கி,
தூண்டல் செய்யா மணிவிளக்கின்
சுடரால், இரவைப் பகல்செய்தார். 40

## கடல் பூத்த தாமரை

வண்டாய் அயன்நான் மறைபாட,
மலர்ந்தது ஒருதா மரைப்போது;
பண்டுஆ லிலையின் மிசைக்கிடந்து,
பாரும் நீரும் பசித்தான்போல்
உண்டான் உந்திக் கடல்பூத்தது;
ஓதக் கடலும் தான்வேறோர்
வெண்தா மரையின் மலர்பூத்தது
ஒத்தது, ஆழி வெண்திங்கள். 41

---

40. அனையாள் : அச்சீதை. அழுங்கும் எல்லை : வருந்தும் பொழுது. அகல்வானம் தீண்ட : வெகு தொலைவிலுள்ள மேலுலகத்தையும் தொடும்படி. சீதமணியின் வேதிகை வாய் : குளிர்ந்த சந்திர காந்தக் கல்லினுற் செய்யப்பட்ட மேடையிலே. நெய்விளக்கம் : நெய்விளக்குகள். வெய்ய : வெப்பமுடையன. தூண்டல் செய்யா: தூண்டுதல் செய்ய வேண்டாத. மணி விளக்கின் : இரத்தின தீபங்களால்.

41. அயன்: பிரமன். போது : மலர். பண்டு : முற்காலத்திலே. மிசை : மேல். கிடந்து : பள்ளிகொண்டு. பார் : பூமி. நீர் : கடல். உந்திக் கடல் : கடல் போன்ற கொப்பூழ். ஓதக்கடல்: அலைகளையுடைய கடல். ஆழிவெண் திங்கள் : கடலினின்று வெண்ணிறச் சந்திரன் (உதித்தது). அயன்வண்டாய் ஒலித்து நான் மறை பாடத் திருமாலின் திருவுந்திக்கடல் ஒரு தாமரை மலரைப் பூத்தது போல், கருங்கடலும் தானும் ஒரு வெண்தாமரை மலரைப் பூத்தது போன்றது, கடலில் சந்திரன் உதித்தது என்பது கருத்து.

### சடையன் புகழ்

வண்ண மாலை கைபரப்பி,
உலகை வளைந்த இருளெல்லாம்
உண்ண எண்ணி, தண்மதியத்து
உதயத்து எழுந்த நிலாக்கற்றை,
விண்ணும் மண்ணும் திசைஅனைத்தும்
விழுங்கிக் கொண்ட விரிநல்நீர்ப்
பண்ணை வெண்ணெய்ச் சடையன்தன்
புகழ்போல் எங்கும் பரந்துளதால். 42

### கருநெருப்பும் வெண்நெருப்பும்

நீங்கா மாயை யவர்தமக்கு
நிறமே தோற்று, புறமேபோய்,
ஏங்காக் கிடக்கும் எறிகடற்கும்,
எனக்கும், கொடியை ஆனுயே;
ஓங்கா நின்ற இருளாய்வந்து
உலகை விழுங்கி, மேன்மேலும்
வீங்கா நின்ற கருநெருப்பின்
இடையே எழுந்த வெண்நெருப்பே! 43

---

42. வண்ணம்: நிறம். மாலை: மாலைப் பொழுது. வளைந்த: சூழ்ந்துள்ள. தண்மதியம் : குளிர்ந்த சந்திரன். நிலாக் கற்றை : நிலாவின் திரளானது விரிநல் நீர்பண்ணை : பரவிய நல்ல நீர்வளத்தை யுடைய கழனிகளையுடைய. வெண்ணெய் : திருவெண்ணெய் நல்லூர், சடையன் : (கம்பனை ஆதரித்த) சடையப்ப வள்ளல். நிலாப் பரவியது சடையன் புகழ்போல் பரவியது என்று நன்றி யுணர்வைக் கொட்டுகிறார் கம்பர்.

43. நீங்கா மாயையவர் : விட்டு நீங்காத மாயையைச் செய்கிற இராமன். புறமே போய் : (உலகத்திற்கு) வெளியே சென்று. ஏங்காக் கிடக்கும் : ஏங்கிக் கொண்டிருக்கிற. எறிகடல் : அலை வீசுகிற கடல். ஓங்கா நின்ற : அதிகப்படுகிற. வீங்காநின்ற : மேன்மேலும் வளருகின்ற. கருநெருப்பு : கருமையான தீ. (விரக வேதனையால் குளிர்தரும் இருள் சீதைக்கு நெருப்புப் போல் வெப்பம் தருகிறது!) வெண்நெருப்பு : வெண்ணிறத்தீ. (இவ்வாறே தண்மதியும் வெண் தணலாகச் சுடுகிறது சீதைக்கு.)

## பூவும் பூவையும்

நீக்கம் இன்றிநி—
மிர்ந்தநி லாக்கதிர்
தாக்க வெந்துத-
ளர்ந்துச ரிந்தனள்;
சேக்கை ஆகி
மலர்ந்தசெந் தாமரைப்
பூக்கள் பட்டதுஅப்
பூவையும் பட்டனள். 44

## மருந்தும் உண்டோ?

வாச மென்கல-
-வைக்களி வாரி,மேல்
பூசப் பூசப்
புலர்ந்து புழுங்கினள்;
வீச வீச
வெதும்பினள், மென்முலை ;
ஆசை நோய்க்கு
மருந்தும்உண் டாம்கொலோ? 45

---

44. நீக்கம் இன்றி: நீங்குதலில்லாமல். நிமிர்ந்த : பரந்த. நிலாக்கதிர் : சந்திரகிரணம். தாக்க : மோத. சேக்கை : படுக்கை. பூவை: சீதை. பட்டனள் : அடைந்தாள். விண்நிலாத் தாக்கச் சீதை வெந்து வீழ்ந்தாள் மலர்ப்படுக்கையில். அப்படுக்கை அவளது விரகதாப வெம்மையால் கூம்பிச் சாம்பியது. சீதை நிலையும் அஃதே.

45. வாசமென் கலவைக் களி : மென்மையான கலவைச் சந்தனக் குழம்பை. வாரி : அள்ளி எடுத்து. புலர்ந்து : (உடல்) வெதும்பி. புழுங்கினள் : தவித்தாள். வீசவீச : (ஆலவட்டம் முதலியவற்றைக்கொண்டு) வீசுந்தோறும். வெதும்பினள் : வெப்பமடைந்தாள். மென்முலை : மென்மையான தனங்களை யுடைய சீதை.

## தையலும் ஆயினன்

முனியும் தம்பியும்
மொய்,முறை யால்தமக்கு
இனிய பள்ளிகள்
எய்திய பின்,இருட்
கனியும் போல்பவன்,
கங்குலும், திங்களும்
தனியும், தானும்அத்
தையலும் ஆயினன். 46

## மின்உருவின் பெண் நலம்

விண்ணின் நீங்கிய
மின்உரு, இம்முறை,
பெண்ணின் நல்நலம்
பெற்றதுஉண் டேகொலோ?
எண்ணின் ஈதுஅலது
என்றுஅறி யேன்;இரு
கண்ணின் உள்ளும்
கருத்துளும் காண்பெறல். 47

---

46. முனி : விசுவாமித்திரமுனிவர். தம்பி : இலக்குவன். முறை : முறைமை. இருள் கனியும் போல்பவன் : இருள் மயமான தொரு பழத்தை ஒப்பவனாகிய இராமன். தனியும் : தனிமைப் பாடும். தையலும் ஆயினன் : சீதையும் ஆனான்.

47. விண்ணின் : மேகத்தினின்று. மின்உரு : மின்னல் வடிவம். நல்நலம் : நல்ல அழகு. எண்ணின் : ஆராயுங்கால். ஈது அலது : இந்த உரு அன்று. (என்று கூற). தோன்றி மறைந் தும், உருவின்றியும் விளங்குவது மின்னல். ஆனால் அம் மின்னல் பெண்ணுருப் பெற்று வானத்திலிருந்து இறங்கி, சீதை யாக எனக்குத் தென்படுகிறது எனக் காதல் மயக்கத்தில் மருளுகிறான் இராமன்.

## பூமகள் கொலோ?




வள்ளல் சேக்கைக்
 கரியவன் வைகுறும்
வெள்ளப் பாற்கடல்
 போல்மிளிர் கண்ணினுள்
அள்ளல் பூமகள்
 ஆகும்கொ லோ?எனது
உள்ளத் தாமரை
 உள்உறை கின்றதே! 48

## அவள் பொன்னுரு ஆயவே

அருள்இ லாள்எனி
 னும்மனத்து ஆசையால்
வெருளும் நோய்விடக்
 கண்ணின் விழுங்கலால்
தெருள்இ லாஉல
 கில்சென்று, நின்றுவாழ்
பொருள்எ லாம்,அவள்
 பொன்உரு ஆயவே! 49

48. வள்ளல் சேக்கை : வரையாது கொடுப்பவனை ஆதிசேடனாகிய படுக்கையைக் கொண்ட. கரியவன் : கருநிறமுள்ள திருமால். மிளிர் : விளங்குகின்ற அள்ளல்பூமகள் : சேற்றிலே உண்டாகிற தாமரை மலரின்மேல் வீற்றிருக்கும் திருமகள். உள்ளத் தாமரை : இதயகமலம்.

49. அருள் : கருணை. வெருளும் நோய் விட : அஞ்சுதற்குக் காரண மான காம நோய் நீங்குமாறு. தெருள் இலா உலகில் : தெளி வில்லாத இவ்வுலகத்தில். சென்று நின்று வாழ்பொருள் : சர-அசரமாகிய பொருள்கள். அவள் : சீதை. பொன் உரு : பொன் வடிவு. காதல் மிகுதியால் இராமனுக்கு எங்கும் சீதை யின் வடிவமே காணப்படுகிறது.

## எண்ணும் கூற்று

வண்ண மேகலைத்
தேர்ஒன்று, வாள்நெடுங்
கண்இ ரண்டு,
கதிர்முலை தாம்இரண்டு,
உண்ண வந்த
நகையும்என்று ஒன்றுஉண்டால்;
எண்ணும் கூற்றினுக்கு
இத்தனை வேண்டுமோ? 50

## வெள்ளை வண்ண விடம்

கொள்ளை கொள்ளக்
கொதித்துஎழு பாற்கடல்
பள்ள வெள்ளம்
எனப்பட ரும்நிலா,
உள்ள உள்ள
உயிரைத் துருவுமால்;
வெள்ளை வண்ண
விடமும்உண் டாம்கொலோ? 51

---

50. வண்ண மேகலை : அழகிய மேகலை என்னும் ஆபரணம். வாள் நெடுங்கண் : வாளாயுதம் போன்ற நீண்ட கண்கள். நகை : புன்சிரிப்பு. கூற்று : யமன். சீதையின் ஒவ்வொரு அவயவமும் கண்முன் தோன்றி இராமனை வதைக்கின்றது.

51. கொள்ளை கொள்ள : கவர்ந்து தன்வசம் ஆக்குதற்கு. பள்ள வெள்ளம் : ஆழமாகிய நீர் வெள்ளம். படரும் : பரவியுள்ள. உள்ள உள்ள : நினைக்க நினைக்க. துருவிட : துளைப்பதனால். வண்ணம் : நிறம். தலைமகளைத் தழுவப்பெறாது தனித்துள்ள இராமனை வெண்ணிலா மரண வேதனைப்படுத்துகிறது. அதனால் வெண் நிலவை வெள்ளைநிற விடம் என்று பழிக்கிறான் இராமன்.

### கன்னியே ஆகும்

ஏகும் நல்வழி;
அல்வழி என்மனம்
ஆகு மோ?இதற்கு
ஆகிய காரணம்
பாகு போல்மொழிப்
பைந்தொடி, கன்னியே
ஆகும்; வேறுஇதற்கு
ஐயுறவு இல்லையே. 52

### செய்ய வெய்யோன் உதயம்

ததையும்மலர்த் தார்அண்ணல் இவ்வண்ணம்
மயல்உழந்து, தளரும் எல்லை
சிதையும்மனத்து இடருடைய செங்கமல
முகம்மலர, செய்ய வெய்யோன்,
புதைஇருளின் எழுகின்ற புகர்முகயா-
னையின்உரிவைப் போர்வை போர்த்த
உதையகிரி எனும்கடவுள் நுதல்கிழித்த
விழியேபோல் உதயம் செய்தான். 53

---

52. ஏகும் : செல்லும். அல்வழி : தீயநெறி. பாகுபோல் மொழிப் பைந்தொடி: கருப்பஞ்சாறுபோல் இனிய சொற்களை யுடைய பசிய பொன் கொடி போன்ற சீதை. கன்னி : கலியாணமாகாத பெண். ஐயுறவு இல்லை : சந்தேகப்பட வேண்டுவதில்லை.

53. ததையும் : நெருங்கின. மலர்த்தார் அண்ணல் : பூக்களால் தொடுக்கப்பட்ட மாலையையுடைய புருடோத்தமனை இராமன். மயல் உழந்து : காம மயக்கத்தால் வருந்தி. எல்லை : பொழுதில். சிதையும் மனத்து : நிலைகுலைகின்ற மனத்தில். செய்ய வெய்யோன் : செந்நிறமுடைய வெப்பக்கிரணங்களை யுடைய சூரியன். புதை இருள் : ஆழ்ந்த இருள். புகர் முக யானை : புள்ளிகளையுடைய முகத்தோடு கூடிய யானை. உரிவை : தோல். உதையகிரி எனும் கடவுள் : உதய பருவத மாகிய உருத்திரமூர்த்தி. நுதல் கிழித்த விழி : நெற்றியினின்று தோன்றிய நெருப்புக்கண்.

## பொலிந்தன பூம்பொய்கை

பண்டுவரும் குறிபகர்ந்து, பாசறையின்
பொருள்வயினின் பிரிந்து போன
வண்டுதொடர் நறுந்தெரியல் உயிர்அனைய
கொழுநர்வர, மணித்தே ரொடும்
கண்டுமனம் களிசிறப்ப ஒளிசிறந்து
மெலிவுஅகலும் கற்பி னூர்போல்
புண்டரிக முகம்மலர அகம்மலர்ந்து
பொலிந்தனபூம் பொய்கை எல்லாம். 54

## விரிந்த கதிர்கள் எல்லாம்

எண்அரிய மறையினொடு கின்னரர்கள்
இசைபாட, உலகம் ஏத்த,
விண்ணவரும், முனிவரரும், வேதியரும்
கரம்குவிப்ப, வேலை என்னும்
மண்ணும்மணி முழவுஅதிர வான்அரங்கில்
நடம்புரி,வாள் இரவிஆன
கண்ணுதல்வா னவன்கனகச் சடைவிரிந்தால்
எனவிரிந்த கதிர்கள் எல்லாம். 55

---

54. பண்டு : முன்னம். வருகுறி : மீண்டு வரும் கால எல்லை. பாசறையின் : பகைவர் மீது போர் செய்ய எழுதல் காரணமாக. வயினின் : ஈட்டுதலில். வண்டு தொடர் : வண்டுகள் இடையீடின்றித் தொடர்ந்து மொய்த்தற்குரிய. தெரியல் : மாலை கொழுநர் : கணவன். கற்பினர் : மனைவிமார். புண்டரிகம் : தாமரை.

55. எண் அரிய : அளவிடுவதற்கு அரிய. ஏத்த : துதிக்க. கரம் குவிப்ப : கை கூப்பி வணங்க. வேலை : கடல். மணி முழவு : அழகிய மத்தளம். நடம்புரி : திருநடம் செய்தருளுகிற. வாள் இரவி : ஒளியையுடைய சூரியன். கண் நுதல் வானவன் : (நெருப்புக்) கண்ணை நெற்றியிலுடைய உருத்திரன். கனகச் சடை : பொன்னிறமான சடைகள். சூரிய கிரணம் பரவுதல் சிவபிரானது செஞ்சடை விரிதலை ஒக்கின்றது என்பது கருத்து.

## துயர் ஆழித் துயில்கின்றான்

கொல்ஆழி நீத்து,அங்குஓர் குனிவயிரச்
சிலைதடக்கை கொண்ட கொண்டல்,
எல்ஆழித் தேர்இரவி இளங்கரத்தால்
அடிவருடி அனந்தல் தீர்ப்ப,
அல்ஆழிக் கரைகண்டான் ஆயிரவாய்
மணிவிளக்கம் அழலும் சேக்கைத்
தொல்ஆழித் துயிலாதே, துயர்ஆழி
யிடைக்கிடந்து துயில்கின் றானே. 56

## வேள்விச் சாலை சார்ந்தான்

முடிச்சனகர் பெருமானும், முறையாலே
பெருவேள்வி முற்றி, சுற்றும்
இடிக்குரலின் முரசுஇயம்ப, இந்திரன்போல்
சந்திரன்தோய் கோயில் எய்தி,
எடுத்தமணி மண்டபத்துள், எண்தவத்து
முனிவரொடும் இருந்தான், பைந்தார்
வடித்தகுனி வரிசிலைக்கை மைந்தனும்,தம்-
-பியும்மருங்கின் இருப்ப மாதோ. 57

---

56. கொல் ஆழி : (கொல்லவல்ல) சக்கராயுதம். குனிவயிரச் சிலை : வளைந்த உறுதியான (கோதண்டம்) வில். தடக்கை : பெரிய கை. கொண்டல் : (இங்கே)மேகவண்ணனை இராமன். எல் : ஒளியை யுடைய. ஆழித்தேர் : ஒற்றைச் சக்கரத்தேர். இரவி : சூரியன். அனந்தல் : தூக்கம். அல் ஆழி : இரவாகிய கடல். ஆயிரவாய் மணி விளக்கம் அழலும் சேக்கை : மாணிக்கமாகிய தீபங்கள் ஒளி வீசப்பெற்ற (ஆதிசேடனாகிய) படுக்கை. தொல்ஆழி : பழமையான திருப்பாற்கடல். துயர் ஆழி : துயர்க்கடல்.

57. முடி : கிரீடம். சனகர் பெருமான் : சனகமகாராசன். முறையாலே : மறை முறைப்படி. முற்றி : முடித்துவிட்டு. இடிக் குரலின் : இடி முழக்கம் போன்ற ஓசையையுடைய. இயம்ப : ஒலிக்க. சந்திரன் தோய் கோயில் எய்தி : சந்திர மண்டலத்தை அளாவி உயர்ந்துள்ள அரண்மனையை அடைந்து. எடுத்த : (உயர்வாக) கட்டப்பட்ட. எண்தவத்து முனிவர் : (யாவராலும் மதித்து) எண்ணப்படுகிற விசுவாமித்திர முனிவர். பைந் தார் : பசிய வெற்றிப் பூமாலை. வடித்த குனிவரி சிலை கை மைந்தன் : சிறந்தெடுத்த வளையும் தன்மையையுடைய வில்லை யேந்திய கையையுடைய இராமன். தம்பி : இலக்குவன். மருங்கின் : பக்கத்தில்.

## தயரதன் தன்புதல்வர்

இருந்தகுலக் குமரர்தமை, இருகண்ணின்
முகந்துஅழகு பருக நோக்கி,
அருந்தவனை அடிவணங்கி, "யாரைஇவர் ?
உரைத்திடுமின், அடிகள்!" என்ன,
'விருந்தினர்கள்; நின்னுடைய வேள்விகா-
-ணியவந்தார்; வில்லும் காண்பார்;
பெருந்தகைமைத் தயரதன்தன் புதல்வர்என,
அவர்பெருமை பேசல் உற்றான். 58

## மனு மன்னன்

ஆதித்தன் குலமுதல்வன்
மனுவினையார் அறியாதார்?
பேதித்த உயிர்அனைத்தும்
பெரும்பசியால் வருந்தாமல்,
சோதித்தன் வரிசிலையால்
நிலமடந்தை முலைசுரப்ப,
சாதித்த பெருந்தகையும்
இவர்குலத்துஓர் தராபதிகாண்! 59

---

58. குலக்குமரர் : உயர்குலத்துதித்த (சக்கரவர்த்தி) குமாரர்களாகிய இராம இலக்குவர். அழகு முகந்து பருக : அழகை அள்ளி முழுமையும் உண்ணுவது போல். அருந்தவன் : விசுவாமித்திரர். வேள்வி : யாகம். காணிய : பார்க்க. வில் : சிவதனுசு. பெருந்தகைமைத் தயரதன் : மிகச் சிறந்த குணவானான தயரத மன்னன்.

59. ஆதித்தன் குல முதல்வன் : சூரிய வமிசத்தில் தோன்றிய முதற் புதல்வன். மனு : மனுச்சக்கரவர்த்தி. பேதித்த : பலவகைப் பட்ட. உயிர் : பிராணி இனங்கள். சோதித் தன் வரிசிலை : ஒளியையுடைய தனது கட்டமைந்த வில். நிலமடந்தை : பூமாதேவி. பெருந்தகை : பெருமைக் குணமுடையோன். தராபதி : அரசன்.

## அணி அரங்கம் தந்தான்

பிணிஅரங்க வினைஅகல,
பெருங்காலம் தவம்பேணி,
மணிஅரங்க நெடுமுடியாய் !
மலர்அயனே வழிபட்ட
பணிஅரங்கப் பெரும்பாயல்
பரஞ்சுடரை, யாம்காண
அணிஅரங்கம் தந்தானை
அறியாதார் அறியாதார்! 60

## இந்திரன் சுமந்தவன்

தான்தனக்கு வெலற்குஅரிய
தானவரை, "தலைதுமித்து,என்
வான்தரக்கிற் றிகொல்?" என்று
குறைஇரப்ப, வரம்கொடுத்துஆங்கு
ஏன்றுஎடுத்த சிலையினன்ஆய்
இகல்புரிந்த இவர்குலத்துஓர்
தோன்றலை,பண்டு இந்திரன்காண்
விடைஏருய்ச் சுமந்தானும். 61

60. பிணி அரங்க : நோய்கள் கெட. வினை : ஊழ்வினை. தவம் பேணி : தவத்தை விரும்பிச் செய்து. மணி அரங்க : நவரத்தினங்களும் அழுத்திப் பதிக்கப் பெற்ற. மலர் அயன் : தாமரைப்பூவில் தோன்றிய பிரமன். பணி அரங்கம் பெரும் பாயல் : ஆதி சேடனது உடம்பாகிய பெரிய திருப்பள்ளி மெத்தை. பரஞ்சுடர் : எவ்வொளிகளிலும் சிறந்த ஒளி வடிவினனை எம்பெருமான். அணி அரங்கம் : அழகிய ஸ்ரீரங்க விமானம்.

61. தான் : தேவந்திரன்தான். தானவர் : அசுரர்கள். தலைதுமித்து : தலையைத் துணித்து. வான் : தேவலோகம். தரக்கிற்றிகொல் : (மீட்டு) கொடுக்க வல்லையோ. இரப்ப : வேண்ட. ஏன்று எடுத்த : மேற்கொண்டு கையில் ஏந்திய. சிலையினன் : வில்லினன். இகல் : போர். தோன்றலை : அரசனை. பண்டு: முன் காலத்தில். விடை ஏறு : எருதின் வடிவு.

## உலகு ஆண்டான்

கருதல்அரும் பெருங்குணத்தோர்
இவர்முதலோர் கணக்குஇறந்தோர்;
திரிபுவனம் முழுதுஆண்டு
சுடர்நேமி செலநின்ருேர்;
பொருதுஉறைசேர் வேலினுய்!
புலிப்போத்தும் புல்வாயும்
ஒருதுறையில் நீர்உண்ண,
உலகுஆண்டான் உளன்ஒருவன். 62

## அமராபதி காத்தோன்

மறைமன்னும் மணிமுடியும்
ஆரமும்வா ளொடுமின்ன,
பொறைமன்னு வானவரும்
தானவரும் பொரும்ஒருநாள்;
விறல்மன்னர் தொழுகழலாய்!
இவர்குலத்தோன் வில்பிடித்த
அறம்என்ன ஒருதனியே
திரிந்துஅமரா பதிகாத்தோன். 63

62. கருதல் அரும் : நினைப்பதற்கும் கூடாத. இவர் முதலோர் : இவர்கள் குலத்து மூதாதையோர். கணக்கு இறந்தோர் : அளவற்றவர்கள். திரிபுவனம் : மூவுலகு. சுடர் நேமி செலநின்ருேர் : ஆக்ஞாசக்கரம் செல்லும்படி (ஆண்டு) வந்தோர். பொருது உறை சேர் வேலினுய் : போர் புரிந்து பின்பு உறையினிடஞ் சேர்கின்ற வில்லையுடைய சனகராசனே. புலிப்போத்து : ஆண் புலிகள். புல்வாய் : மான். ஒரு துறையில் நீர் உண்ண : ஒரே நீர்த்துறையில் நீருண்ணுமாறு.

63. மறை மன்னும் மணிமுடி : வேதவிதிப்படி முறையாக (அபிஷேகம் செய்யப்பட்ட) இரத்தினக் கிரீடம். ஆரம் : மாலை. பொறை மன்னு : பொறுமை மிகுந்த. தானவர் : அசுரர்கள். பொரும் ஒரு நாள் : போர் செய்யும் ஒரு காலத்தில். விறல் : வெற்றி. கழலாய் : பாதங்களை உடையவனே. வில் பிடித்த அறம் என்ன : கையில் வில்லேந்திய தரும தேவதையைப் போல். ஒரு தனியே : தானொருவனுகவே. அமராபதி : இந்திரனின் தலைநகரமாகிய அமராவதி.

## உயிரை மாருக வழங்கினன்

இன்உயிர்க்கும் இன்உயிராய்
இருநிலம்காத் தார்என்று
பொன்உயிர்க்கும் கழலவரை
யாம்போலும் புகழ்கிற்பாம்?
மின்உயிர்க்கும் நெடுவேலாய்!
இவர்குலத்தோன் மென்புறவின்
மன்உயிர்க்குத் தன்உயிரை
மாருக வழங்கினனல். 64

## கங்கை கொணர்ந்தான்

தூநின்ற சுடர்வேலாய்!
அனந்தனுக்கும் சொலற்குஅரிதேல்,
யான்இன்று புகழ்ந்துரைத்தற்கு
எளிதோ?ஏடு அவிழ்கொன்றைப்
பூநின்ற மவுலியையும்
புக்குஅளைந்த புனல்கங்கை,
வான்நின்று கொணர்ந்தானும்
இவர்குலத்துஓர் மன்னவன்காண்! 65

---

64. இன் உயிர் : இனிய உயிர். இருநிலம் : பெரிய பூவுலகம். பொன் உயிர்க்கும் கழலவர் : அழகை விளக்குகிற வீரக்கழலை யுடையவர். புகழ்கிற்பாம் : புகழவல்லோம். மின் உயிர்க்கும் : மின்னல் போன்ற ஒளி எழுவதற்கு இடமான. மென்புறவின் : மெல்லிய புருவுக்காக. மன் உயிர் : நிலை பெற்ற உயிர். மாருக : ஈடாக. இங்கு பேசப்படும் பேரரசன் சிபிச் சக்கர வர்த்தியாவான்.

65. தூநின்ற சுடர் வேலோய் : (பகைவரது) தசை பொருந்தி நின்ற ஒளியையுடைய வேலாயுதத்தையுடைய மன்னவனே. அனந்தன் : (ஆயிரம் நாவையுடைய) ஆதிசேடன். ஏடு அவிழ் கொன்றைப்பூ நின்ற மவுலி : இதழ்கள் விரிகின்ற கொன்றை மலர்கள் சூடப்பெற்ற திருமுடி. புக்கு அளைந்த புனல் கங்கை: வந்து பொருந்திய புண்ணிய தீர்த்தத்தையுடைய கங்காநதி. வான் நின்று: தேவலோகத்திலிருந்து. மன்னவன்: பகீரதன்.

## செரு வென்றான்

சந்திரனை வென்றானும்,
உருத்திரனைச் சாய்த்தானும்
துந்துஎனும் தானவனைச்
சுடுசரத்தால் துணித்தானும்
வந்தகுலத் திடைவந்த
ரகுஎன்பான் வரிசிலையால்
இந்திரனை வென்றுதிசை
இருநான்கும் செருவென்றான் 66

## பகைக்கடல் கடைந்தான்

வில்என்னும் நெடுவரையால்
வேந்துஎன்னும் கடல்கலக்கி,
எல்என்னும் மணிமுறுவல்
இந்துமதி எனும்திருவை,
அல்என்னும் திருநிறத்த
அரிஎன்ன அயன்என்பான்
மல்என்னும் திரள்புயத்துக்கு
அணிஎன்ன வைத்தானே. 67

---

66. சாய்த்தானும் : தோற்கடித்தானும். துந்து எனும் தானவன்: துந்து என்னும் அசுரன். சுடுசரம் : எரிக்க வல்ல பாணம். துணித்தான் : கொன்றான். வந்த : பிறப்பதற்கு இடமான. வரிசிலை : கட்டமைந்த வில். திசை இரு நான்கு : எண்திசைகள். செரு : போர்.

67. நெடுவரை : பெரிய மந்தரமலை. வேந்து என்னும் : (பகை) அரசர்கள் என்கின்ற. எல் : ஒளி. மணிமுறுவல் : முத்தை ஒத்த பற்கள். திருவை : இலக்குமி போன்றவளை. அல் : இருள். திருநிறத்த : அழகிய நிறத்தையுடைய. அரி : திருமால். அயன்: அயன் என்னும் சூரியகுல மன்னன். மல் என்னும் : மல் தொழிலின் வடிவமெனத் தக்க. திரள்புயம் : திரண்ட தோள்கள்: அணிஎன்ன வைத்தான் : ஆபரணமாக அணிந்தான்

## அயன் புதல்வன்

அயன்புதல்வன் தயரதனை
அறியாதார் இல்லை;அவன்
பயந்தகுலக் குமரர்,இவர்
தமக்குள்ள பரிசுஎல்லாம்
நயந்துரைத்துக் கரைஏறல்
நான்முகற்கும் அரிதாம்;பல்
இயம்துவைத்த கடைத்தலையாய்!
யான்அறிந்த படிகேளாய்! 68

## மகவு இன்றி வருந்துவான்

துனிஇன்றி உயிர்களிப்ப,
சுடர்ஆழிப் படைவெய்யோன்
பனிவென்ற படிஎன்ன,
பகைவென்று படிகாப்போன்
தனுஅன்றித் துணைஇல்லான்,
தருமத்தின் கவசத்தான்,
மனுவென்ற நீதியான்
மகவுஇன்றி வருந்துவான். 69

---

68. பயந்த: பெற்ற. குலக்குமரர் : சிறந்த குமரர்கள். பரிசு : சிறப்பு. நயந்து : விரும்பி. கரை ஏறல் : (இவர்களது புகழ்க் கடலின்) கரையை அடைவதற்கு. பல் இயம் துவைத்த கடைத் தலையாய்: அநேக வாத்தியங்கள் முழங்குவதற்கு இடமான தலைவாயிலை யுடைய சனக மன்னனே. பிரமனும் பேசி மாளாத புகழுடைய இக்குமரர்களின் சிறப்பை ஒருவாறு கூறுகிறேன் என்று விசுவாமித்திரர் கூறுவதாக அமைந்த இப்பாடலின் நயம் பெரிதும் இன்புறத்தக்கது.

69. துனி இன்றி உயிர் களிப்ப : துன்பமில்லாமல் உயிரனைத்தும் வாழுமாறு. சுடர் ஆழிப்படை : ஒளிவீசும் சக்கராயுதப் படை (போன்ற). வெய்யோன் : சூரியன். பனி வென்றபடி : பனியை (எளிதில் ஒழித்து) வெற்றிகொண்டவாறு. படி காப்போன்: உலகத்தைக் காத்தருள்பவனாகிய தயரதன். தனு : வில். தருமத்தின் கவசத்தான் : தருமமாகிய கவசத்தை யுடையவன். மனு வென்ற நீதியான் : மனுச்சக்கரவர்த்தியையும் தனது நீதிநெறியிற் செயித்தவன். மகவு : பிள்ளைப்பேறு.

## கருங்கடலைப் பயந்தாள்

விரிந்திடுதீ வினைசெய்த
வெவ்வியதீ வினையாலும்
அருங்கடைஇல் மறைஅறைந்த
அறம்செய்த அறத்தாலும்
இருங்கடகக் கரதலத்து,இவ்
எழுதரிய திருமேனிக்
கருங்கடலைச் செங்கனிவாய்க்
கவுசலைஎன் பாள்பயந்தாள். 70

## வள்ளலையே அனையான்

தள்ளஅரிய பெருநீதித்
தனிஆறு புகமண்டும்
பள்ளம்எனும் தகையானை,
பரதன்எனும் பெயரானை,
எள்ளஅரிய குணத்தாலும்
எழிலாலும் இவ்இருந்த
வள்ளலையே அனையானை,
கேகயர்கோன் மகள்பயந்தாள். 71

---

70. விரிந்திடு தீவினை : பரவிய பாவங்கள். வெவ்விய தீவினை. கொடிய பாவம். அருங்கடை இல் மறை : அருமையான எல்லையில்லாத வேதம். அறைந்த : கூறப்பட்டுள்ள. அறம் செய்த அறம் : தருமங்கள் செய்த தருமம். இருங்கடகக் கரதலம்: பெரிய கடகம் என்னும் அணியை அணிந்த கைகள். எழுதரிய திருமேனிக் கருங்கடல் : ஓவியத்து எழுதஒண்ணாத் திருவுருவத்தனை கரிய கடல்வண்ணன் இராமன். கவுசலை : கோசலை. பயந்தாள் : பெற்றாள். பாவம் அழிய, புண்ணியம் வளர்ந்து பெருக இராமபிரான் கோசலை மணிவயிற்றில் வந்துதித்தான் என்பது கருத்து.

71. தள்ள அரிய : விலக்குதற்குக் கூடாத. பெருநீதித் தனி ஆறு: சிறந்த நியாயங்களாகிற ஒப்பற்ற நதிகள். புகமண்டும் பள்ளம் எனும் தகையான் : வந்தடைவதால் நிறைந்திருக்கும் ஆழமாகிய கடல் என்று சொல்லத்தக்க நற்குணங்களையுடையவன். எள்ள அரிய : இகழ்வதற்குக் கூடாத. எழில் : அழகு. வள்ளல்: இராமன். அனையானை : ஒத்தவனை. நியாய நதிகள் வந்து நிறையும் நற்குணக்கடல் என்று பரதனைப் பாராட்டுகிறார் கம்பர்.

## இருவரையும் ஈன்றெடுத்தாள்

அருவலிய திறலினராய்
அறம்கெடுக்கும் விறல்அரக்கர்
வெருவருதிண் திறலார்கள்,
வில்ஏந்தி வரும்மேருப்
பருவரையும் நெடுவெள்ளிப்
பருப்பதமும் போல்வார்கள்,
இருவரையும், இவ்இருவர்க்கு
இளையாளும் ஈன்றுஎடுத்தாள் 72

## மறை நான்கும் அனையார்கள்

தலைஆய பேர்உணர்வின்
கலைமகட்குத் தலைவராய்,
சிலைஆயும் தனுவேதம்
தெவ்வரைப்போல் பணிசெய்ய,
கலைஆழிக் கதிர்த்திங்கள்
உதயத்தில் கலித்துஓங்கும்
அலைஆழி எனவளர்ந்தார்
மறைநான்கும் அனையார்கள். 73

---

72. அருவலிய : (வெல்லுதற்கு) அருமையான வலிமையையுடைய. திறலினர் : வெற்றியையுடையவர். கெடுக்கும்: அழிக்கும். விறல் அரக்கர் : வீரத்தன்மையையுடைய அரக்கர். வெருவரு : அஞ்சுமாறு. திண்திறலார்கள் : மிக்க வலிமையுடையவர்கள். மேருப் பருவரை : பருத்தமேருமலை. நெடு வெள்ளிப் பருப்பதம்: உயர்ந்த வெள்ளி மயமான கைலாயமலை. இருவர் : இலக்குவன், சத்துருக்கனன். இவ்விருவருக்கு இளையாள்: கோசலை, கைகேயி ஆகியோருக்கு இளையவளாகிய சுமத்திரை.

73. தலை ஆய பேர் உணர்வின் : முக்கியமானவற்றையெல்லாம் அறியவல்ல பேரறிவில். கலைகட்குத் தலைவராய் : சரசுவதி தேவிக்கும் முதல்வராய். சிலை ஆயும் தனுவேதம்: வில்திறத்தை ஆராய்ந்து கூறும் வில்மறை. தெவ்வர் : பகைவர். கலை ஆழிக் கதிர்த் திங்கள்:கலைகள் நிறைந்த வட்டமான ஒளியுடைய முழுமதி. கலித்து ஓங்கும் : ஒலித்துப் பொங்குகின்ற. அலை அழி : அலைகளையுடைய கடல். மறை நான்கும் அனையார்கள் : நான்கு வேதங்களையும் ஒத்தவர்கள்.

## வளர்த்தானும் வசிட்டன்

திறையோடும் அரசுஇறைஞ்சும்
செறிகழற்கால் தயரதனும்
பொறையோடும் தொடர்மனத்தான்
புதல்வர்எனும் பெயரேகாண்!
உறைஓடும் நெடுவேலாய்!
உபநயன விதிமுடித்து,
மறைஓது வித்து,இவரை
வளர்த்தானும் வசிட்டன்காண். 74

## தாடகையே தலைப்பட்டாள்

ஈங்குஇவரால், என்வேள்விக்கு
இடையூறு கடிதுஇயற்றும்
தீங்குடைய கொடியோரைக்
கொல்விக்கும் சிந்தையனாய்,
பூங்கழலார்க் கொண்டுபோய்
வனம்புக்கேன், புகாமுன்னம்
தாங்கஅரிய பேர்ஆற்றல்
தாடகையே தலைப்பட்டாள். 75

---

74. திறையோடும் : கப்பங்களுடன். அரசு இறைஞ்சும் : அரசர்கள் வணங்கும். செறிகழற்கால் தயரதன் : நெருங்கின வீரக்கழலை யணிந்த பாதத்தையுடைய தயரதமன்னன். பொறையோடும் தொடர் மனத்தான் : பொறுமைக் குணத்துடனே பொருந்திய மனத்தையுடையவன். உறைஓடும் நெடுவேலோய் : (பகைவரில்லாமையால்) உறையிலே தங்குகின்ற நீண்ட வேலாயுதத்தையுடையவனே. ஓதுவித்து : பயிற்றுவித்து.

75. ஈங்கு இவரால்: இங்கே உள்ள இராம-இலக்குவர்களால். வேள்வி: யாகம். கடிது: விரைவாக. இயற்றும்: செய்யும். கொடியோர்: கொடிய செயல் புரியும் அரக்கர்கள். கொல்விக்கும் : கொல்ல வேண்டிய. சிந்தையனாய் : கருத்தையுடையவனாய். பூங்கழலார்: பூப்போன்ற மெல்லிய பாதங்களையுடையவர்களான இக்குமாரர்கள் : புகா முன்னம் : சேர்தற்கு முன்பே. தாங்கரிய பேராற்றல் தாடகையே: பொறுப்பதற்குக் கூடாத மிக்க வலிமையையுடைய தாடகை என்னும் அரக்கியே. தலைப்பட்டாள்: எதிர்த்து வந்தாள்.

## ஆண்தகைதன் வாளி

அலைஉருவக் கடல்உருவத்து
ஆண்தகைதன் நீண்டுயர்ந்த
நிலைஉருவப் புயவலியை
நீஉருவ நோக்குஐயா!
உலைஉருவக் கனல்உமிழ்கண்
தாடகைதன் உரம்உருவி
மலைஉருவி, மரம்உருவி,
மண்உருவிற்று, ஒருவாளி. 76

## புக்க இடம் அறிந்திலேன்

செக்கர்நிறத்து எரிகுஞ்சிச்
சிரக்குவைகள், பொருப்புஎன்ன
உக்கனவோ முடிவுஇல்லை;
ஓர்அம்பி னெடும்அரக்கி
மக்களில்அங்கு ஒருவன்போய்
வான்புக்கான்; மற்றையவன்
புக்கஇடம் அறிந்திலேன்;
போந்தனென்,என் வினைமுடித்தே. 77

---

76. அலை உருவ : அலைகளின் வடிவமாகத் தோன்றுகிற. கடல் உருவத்து : கடல் போன்ற கரிய திருமேனியுடைய. ஆண்தகை : ஆண்மைக் குணமுள்ள இராமன். நிலை உருவப் புயவலி: நிலையான எழிலையுடைய தோள்களின் பலம். நீ உருவ நோக்கு: நீ நன்றாக ஆராய்ந்து பார்ப்பாயாக. உலை உருவக் கனல் உமிழ் கண் தாடகை : உலைக் களத்திலேயுள்ள செந்நிறமான நெருப்பைச் சொரிகிற கண்களையுடைய தாடகை. உரம் : மார்பு. உருவி: துளைத்து. ஒருவாளி: ஒப்பற்ற அம்பு.

77. செக்கர் நிறம் : செவ்வானம் போன்ற நிறம். எரிகுஞ்சிச் சிரக் குவைகள்: நெருப்புப் பற்றி எரிகின்றாற் போன்ற செம்மயிர்களை யுடைய அரக்கர்களின் தலைக்குவியல்கள். பொருப்பு என்ன: மலைகள் போல. உக்கனவோ : சிதறியனவோ. ஒருவன்: சுபாகு. வான்புக்கான் : மேலுலகம் சென்றான். மற்றையவன்: மாரீசன். புக்கஇடம் : போய் ஒழிந்த இடம். போந்தனென்: வந்தேன். வினைமுடித்து : காரியம் நிறைவேற்றி.

## ஏவல் செய்குனவால்

ஆய்ந்துஏற உணர்ஐய!
அயற்கேயும் அறிவுஅரிய;
காய்ந்துஏவின் உலகுஅனைத்தும்
கடலோடும் மலையோடும்
தீய்ந்துஏறச் சுடுகிற்கும்
படைக்கலங்கள் செய்தவத்தால்
ஈந்தேனும் மனம்உட்க,
இவற்குஏவல் செய்குனவால், 78

## வரலாறும் புயவலியும்

கோதமன்தன் பன்னிக்கு
முன்னைஉருக் கொடுத்தது,இவன்
போதுவென்றது எனப்பொலிந்த,
பொலங்கழற்கால் பொடிகண்டாய்;
காதல்என்தன் உயிர்மேலும்
இக்கரியோன் பால்உண்டால்;
ஈதுஇவன்தன் வரலாறும்,
புயவலியும் எனஉரைத்தான். 79

---

78. ஆய்ந்து ஏற உணர் : ஆராய்ந்து முழுவதும் அறிவாயாக. அயற்கேயும் : பிரமதேவனுக்கும். காய்ந்து : கோபித்து. ஏவின் : (அம்பை) ஏவிவிட்டால். தீய்ந்து ஏறச் சுடுகிற்கும் : கரிந்து போம்படி எரிக்கவல்ல. ஈந்தேனும் : கொடுத்த யானும். மனம் உட்க : மனம் வெட்கப்படுமாறு. செய்குன : செய்கின்றன.

79. பன்னி : மனைவி. போதுவென்றது என : செந்தாமரை மலரை வென்றது என்னும்படியான. பொலிந்த : விளங்குகிற. பொலங் கழற்கால் பொடி: பொன்னலாகிய வீரக் கழலையணிந்த திருவடித் தூளி. காதல் : அன்பு. இக்கரியோன்பால் : கருநிறமுள்ள இந்த இராமனிடத்தில். புயவலி : தோள்வலி.

## இடர்க்கடல் ஏற்றும்

மாற்றம்யாது உரைப்பது?
மாய விற்குநான்
தோற்றனென்; என்மனம்
துளங்கு கின்றதால்;
நோற்றனள் நங்கையும்;
நொய்தின் ஐயன்வில்
ஏற்றுமேல், இடர்க்கடல்
ஏற்றும் என்றனன். 80

## வரிசிலை கொணர்மின்

என்றனன்; ஏன்று,தன்
எதிர்நின் றுரை,'அக்
குன்றுஉறழ் வரிசிலை
கொணர்மின், ஈண்டு'என,
'நன்று'என வணங்கினர்,
நால்வர் ஓடினர்;
பொன்திணி கார்முகச்
சாலை புக்கனர். 81

---

80. மாற்றம் : உரை. உரைப்பது : சொல்வது. துளங்குகின்றது : நடுங்குகின்றது. நோற்றனள் : தவம் செய்தாள் : நங்கை : சீதை. நொய்தின்: விரைவாக. ஐயன்: இராமன். ஏற்றுமேல்: நாணேற்றுவானால். இடர் : துன்பம்.

81. ஏன்று : உடன்பட்டு. குன்றுஉறழ் வரிசிலை : மலையை ஒத்த கட்டமைந்த சிவதனுசு. பொன்திணி கார்முகச்சாலை : பொற் கட்டமைந்த சிவதனுசு வைக்கப்பட்டுள்ள இடம். புக்கனர்: சென்றார்.

## வேதனை வில்

போதகம் அனையவன்
பொலிவை நோக்கி,அவ்
வேதனை தருகின்ற
வில்லை நோக்கி,தன்
மாதினை நோக்குவான்
மனத்தை நோக்கிய,
கோதமன் காதலன்
கூறல் மேயினன். 82

## தனிக் கார்முகம்

இமையவில் வாங்கிய
ஈசன், "பங்குஉறை
உமையினை இகழ்ந்தனன்
என்ன" ஓங்கிய
கமைஅறு சினத்தன்இக்
கார்மு கம்கொளா,
சமைஉறு தக்கனர்
வேள்வி சாரவே. 83

---

82. போதகம் அனையவன் : யானைக்கன்றை ஒத்தவனாகிய இராமன். பொலிவு : அழகு. வேதனை : மனவருத்தம். தன்மாது : தன் மகளான சீதை. நோக்குவான் : பார்ப்பவனாகிய சனகன். கோதமன் காதலன் : கௌதம முனிவரின் மகனாகிய சதானந்த முனிவன்.

83. இமையவில் வாங்கிய ஈசன் : மேருமலையை வில்லாக வளைத்த சிவபிரான். பங்கு உறை உமையினை : (தன்) இடப்பக்கத்திலே வாழ்கின்ற பார்வதி தேவியை. இகழ்ந்தனன் : அவமானப் படுத்தினன். ஓங்கிய : பொங்கி எழுந்த. கமைஅறு சினத்தன்: பொறுமையற்ற கோபத்தையுடையவன். கார்முகம் : வில். கொளா : எடுத்துக்கொண்டு. சமை உறு : பொறுமை பொருந்திய. வேள்வி சாரவே : யாக சாலையை நோக்கிச் சேர:

## முனிவும் ஆறினன்

உக்கன பல்லொடு,
கரங்கள் வீழ்ந்தன;
புக்கனர் வானவர்
புகாத சூழல்கள்;
தக்கன் நல் வேள்வியில்
தழலும் ஆறின;
முக்கண் எண் தோளவன்
முனிவும் ஆறினன். 84

## மன்னன்பால் வைத்தான்

தாளுடை வரிசிலை,
சம்பு, உம்பர்தம்
நாள்உடை மையின்,அவர்
நடுக்கம் நோக்கி,இக்
கோளுடை விடைஅனன்
குலத்துள் தோன்றிய
வாளுடை உழவன்ஓர்
மன்னன் பால்வைத்தான். 85

---

84. கரங்கள் : கைகள். உக்கன : கீழே சிந்தின. புக்கனர் : பதுங்கினர். புகாத சூழல்கள் : (அதுவரை) புகுந்திராத இடங்கள். தழல் : (யாகத்திற்கான) நெருப்பு. முக்கண் எண்தோளவன் : மூன்று கண்களையும் எட்டுத் தோள்களையுமுடைய சிவபிரான். முனிவும் ஆறினன் : கோபமும் தணிந்தான்.

85. தாளுடை வரிசிலை : வலிய அடித்தண்டையுடைய கட்டமைந்த வில். சம்பு : சிவபிரான். உம்பர் : வானவர். தம் நாளுடைமையின் : (இன்னும் தாம்) வாழவேண்டிய ஆயுள்நாளை உடைமையால். இக்கோளுடை விடை அனன் : இந்த வலிமை கொண்ட இடபம் போன்றவனாகிய சனக மன்னனது. வாளுடை உழவன் : வாளாயுதத்தைக் கொண்டு போர்க்களத்தில் உழுபவன். பால் : இடத்தில்.

## யார் உளர் அறிபவர்

கார்முக வலியையான்
கழறல் வேண்டுமோ?
வார்சடை அரன்நிகர்
வரத! நீஅலால்,
யார்உளர் அறிபவர் ?
இவற்குத் தோன்றிய
தேர்முக அல்குலாள்
செவ்வி கேள்,என. 86

## வேள்விநிலம் உழுதேம்

இரும்புஅனைய கருநெடுங்கோட்டு
இணைஏற்றின் பணைஏற்ற
பெரும்பியலில் பளிக்குநுகம்
பிணைத்து,அதனோடு அணைத்துஈர்க்கும்
வரம்பில்மணிப் பொன்கலப்பை
வயிரத்தின் கொழுமடுத்திட்டு
உரம்பொருஇல் நிலம்,வேள்விக்கு
அலகுஇல்பல சால்உழுதேம். 87

---

86. கார்முகவலியை : வில்லின் வல்லமையை. கழறல் : எடுத்துச் சொல்லல். வார்சடை : நீண்ட சடை முடி. அரன்நிகர் வரத : சிவபிரானை ஒத்த முனிவனே. தோன்றிய : அவதரித்த. தேர்முக அல்குலாள் : சீதை. செவ்வி : (சிறப்பான) வரலாறு.

87. இரும்புஅனைய கருநெடுங்கோடு : இரும்பை ஒத்த வலிய நீண்ட கொம்புகள். ஏற்றின் : எருதின். பணைஏற்ற பெரும்பியலில்: பருமையான பெரிய பிடரியின் மேல். பளிக்கு நுகம்: பளிங்கினால் செய்த நுகத்தடி. பிணைத்து : பூட்டி. ஈர்க்கும் : இழுத்துக்கொண்டு போகப்படும். வயிரத்தின் கொழு மடுத்திட்டு : வயிரத்தால் செய்த கொழுவைச் சேர்த்து. உரம்பொரு இல் : பலத்தினால் ஒப்பில்லாத. அலகுஇல் பலசால் : அளவில்லாத பல சால்.

## பெண் அரசி தோன்றினாள்

உழுகின்ற கொழுமுகத்தின்,
உதிக்கின்ற கதிரின்ஒளி
பொழிகின்ற புவிமடந்தை
உருவெளிப்பட் டெனபுணரி
எழுகின்ற தெள்அமுதோடு
எழுந்தவளும் இழிந்தொதுங்கித்
தொழுகின்ற நல்நலத்துப்
பெண்அரசி தோன்றினாள். 88

## வரிசிலையும் திருமணமும்

கலித்தானைக் கடலோடும்
கைத்தானக் களிற்றுஅரசர்
ஒலித்துஆனை எனவந்து,
மணம்மொழிந்தார்க்கு எதிர்,"உருத்த
புலித்தானை, களிற்றுஉரிவைப்
போர்வையான் வரிசிலையை
வலித்தானே மங்கைதிரு
மணத்தான்"என்று யாம்வலித்தேம். 89

---

88. உழுகின்ற கொழுமுகத்தின் : உழும் தொழிலைச் செய்கின்ற கொழுவின் முனையில். கதிரின் : சூரியனின். பொழிகின்ற : வெளி வீசுகின்ற. புவிமடந்தை : பூமிதேவி. புணரி எழுகின்ற தெள் அமுதோடு எழுந்தவள் : பாற்கடலிலிருந்து தோன்றின தெள்ளிய அமுதத்தோடு உடன் பிறந்தவளான இலக்குமி. இழிந்து : (தன் அழகில்) தாழ்ந்து. நல்நலத்துப் பெண்ணரசி : மிக்க அழகையுடைய பெண்ணரசியான சீதை.

89. கலி தானைக் கடலோடும் : பேராரவாரத்தையுடைய சேனை சமுத்திரத்தோடு. கைதானக் களிற்று அரசர் : துதிக்கையையும் மதநீரையுமுடைய யானை போன்ற மன்னர். ஒலித்து : பெரு முழக்கம் செய்து. உருத்த புலித்தானைக் களிற்று உரிவைப் போர்வையான் : கோபித்த புலியின் தோலை ஆடையாக உடுத்து, யானைத்தோலைப் போர்வையாகக் கொண்ட சிவபிரான். வலித்தானே : வளைத்தவனே. மங்கை : சீதை. வலித்தேம் : உறுதியாகச் சொன்னோம்.

## இவன் ஏற்றின் நன்று

அன்றுமுதல் இன்றுஅளவும்,
ஆரும்இந்தச் சிலைஅருகு
சென்றும்இலர்; போய்ஒளித்த
தேர்வேந்தர் திரிந்தும்இலர்;
"என்றும்இனி மணமும்இலை"
என்றுஇருந்தேம்; இவன்ஏற்றின்,
நன்று;மலர்க் குழல்சீதை
நலம்பழுதுஆ காது"என்றான். 90

## நெடுஞ்சிலையை நோக்கினான்

நினைந்தமுனி பகர்ந்தஎலாம்
நெறிஉன்னி, அருந்தவனும்
புனைந்தசடை முடிதுளக்கி,
போர்ஏற்றின் முகம்பார்த்தான்;
வனைந்தனைய திருமேனி
வள்ளலும்அம் மாதவத்தோன்
நினைந்தஎலாம் நினைந்துஅந்த
நெடுஞ்சிலையை நோக்கினான். 91

---

90. ஆரும் : எந்த மன்னரும். சிலை : வில். வேந்தர் : மன்னர். திரிந்தும் : திரும்பி வந்தாரும். இவன் ஏற்றின் : (இந்த) இராமன் (சிவதனுசை) நாணேற்றினால். மலர்க்குழல் : மலரை அணிந்த கூந்தலையுடையாள். நலம் : அழகு. பழுது ஆகாது : வீணாகாது.

91. நினைந்த முனி : ஆலோசித்த சதானந்த முனிவர். பகர்ந்த : சொன்ன. நெறி உன்னி : முறைப்படி சிந்தித்து. அருந்தவன் : அரிய தவசியான விசுவாமித்திர முனி. புனைந்த : கட்டப்பட்ட. துளக்கி : அசைத்து. போர் ஏறு : போர்ச்சிங்கம் போன்ற இராமன். வனைந்தனைய திருமேனி வள்ளல் : ஓவியத்தில் வரைந்தாற்போன்ற திருமேனியையுடைய இராமன். மாதவத்தோன் : பெரும் தவசியான விசுவாமித்திரன். நெடுஞ்சிலையை : நீண்ட வில்லை.

## விண்ணவர் ஆர்த்தார்

பொழிந்தநெய் ஆகுதி
வாய்வழி பொங்கி
எழுந்த கொழுங்கனல்
என்ன எழுந்தான்;
'அழிந்தது, வில்'என
விண்ணவர் ஆர்த்தார்;
மொழிந்தனர் ஆசிகள்
முப்பகை வென்றார். 92

## ஆயிரம் வில் இற்றன

தூய தவங்கள்
தொடங்கிய தொல்லோன்
ஏயவன் வல்வில்
இறுப்பதன் முன்னம்,
சேயிழை மங்கையர்
சிந்தைதொறு எய்யா
ஆயிரம் வில்லை
அனங்கன் இறுத்தான். 93

92. பொழிந்த : சொரிந்த. நெய் ஆகுதி வாய்வழி பொங்கி : நெய்யாகிய பூர்ணாகுதி வீழ்ந்த தீ முகத்தினின்றும் கிளர்ந்து மேலெழுந்த. கொழுங்கனல் என்ன : நன்கு எரிகின்ற அக்கினி போல. விண்ணவர் : தேவர். ஆர்த்தார் : ஆரவாரம் செய்தார்கள். முப்பகை வென்றார் : காமம், வெகுளி, மயக்கம் என்ற மூன்று உட்பகையை வென்ற இருடியர். இராமபிரான் எழுந்த வேகத்தையும், தோற்றத்தையும் நன்கு படம் பிடித்துக் காட்டும் இக்கவி, தமிழ் மொழிக்கே சொந்தமான 'ழ' கர ஒலியின் சிறப்பினையும் காதார ஒலிக்கின்றது.

93. தூய தவங்கள் தொடங்கிய தொல்லோன் : பரிசுத்தமான தவங்களை இயற்றும் பழையோனாகிய விசுவாமித்திர முனிவன். ஏயவன் : ஏவப்பெற்ற இராமன் வல்வில் : வலியவில். இறுப்பதன்முன் : முறிப்பதற்கு முன். சேயிழை மங்கையர் : செவ்விய ஆபரணங்களையணிந்த மாதர்கள். சிந்தை தொறு : மனங்கள் தோறும். எய்யா : (மலரம்புகளை) எய்து. அனங்கன் : மன்மதன். இறுத்தான் : முறித்தான்.

## வாழ்வு இலள்

காணும் நெடுஞ்சிலை
 கால்வலிது என்பார் ;
நாணுடை நங்கை
 நலங்கிளர் செங்கேழ்ப்
பாணி, இவன்படர்
 செங்கை படாதேல்
வாள்நுதல் மங்கையும்
 வாழ்விலள் என்பார். 94

## எரியில் புகமூழ்குதும்

கரங்கள் குவித்துஇரு
 கண்கள் பனிப்ப,
'இருங்களிறு இச்சிலை
 ஏற்றிலன் ஆயின்
நரந்த நறைக்குழல்
 நங்கையும், நாமும்
முருங்குஎரி யில்புக
 மூழ்குதும்' என்பார். 95

---

94. காணும் : காணப்படுகின்ற. கால் : அடிப்பாகம். வலிது : வலிமையுடையது. நாணுடை நங்கை : நாணத்தை (பூணுகக்) கொண்ட பெண்ணாகிய சீதை. நலங்கிளர் செங்கேழ்ப்பாணி : அழகு விளங்குகின்ற செந்நிறமுள்ள கையில். இவன் : (இங்கே) இராமன். படர் செங்கை : பரவிய செந்நிறமுள்ள கை. படாதேல் : பற்றாமல் போமாயின். வாள் நுதல் மங்கை: ஒளியுள்ள நெற்றியையுடைய சீதை.

95. கரங்கள் குவித்து : (ஒரு சில மாதர்) கைகளைக் கூப்பிக் கொண்டு. கண்கள் பனிப்ப : கண்ணீர் வடிய. இருங்களிறு: பெரிய மதயானை போன்ற இராமன். ஏற்றிலன் : நாண் ஏற்றானாயின். நரந்த நறைக்குழல் நங்கை : கத்தூரி மணம் கமழும் கூந்தலையுடைய சீதை. முருங்கு எரியில் புக மூழ்குதும் : எரித்தழிக்கும் தீயிடையே புகுந்து மூழ்குவோம்.

## வில் இட்டது பேதைமை

வள்ளல் மணத்தை
மகிழ்ந்தனன் என்றால்,
'கொள்'என முன்பு
கொடுப்பதை அல்லால்
வெள்ளம் அணைத்தவன்
வில்லை எடுத்துஇப்
பிள்ளைமுன் இட்டது
பேதைமை என்பார். 96

## ஞானமுனிக்கு நாண் இலை

ஞானமு னிக்குஒரு
நாண்இலை என்பார்;
கோன்இவ னின்கொடி-
யோன்இலை என்பார் ;
மானவன் இச்சிலை
கால்வளை யானேல்
பீனத னத்தவள்
பேறுஇலள் என்பார். 97

---

96. வள்ளல் : (இங்கே) இராமன். வெள்ளம் அணைத்தவன் வில் : கங்கை வெள்ளத்தைத் தடுத்து (தன் சடைமீது) கட்டிய சிவபிரானின் வில். பிள்ளை : சிறுவன். பேதைமை : அறிவீனம். சிறுபிள்ளை முன் சிவதனுசை இட்டது சனகனின் அறிவீனம்; அவன் விரும்பினால் சீதையைக் கலியாணம் செய்து கொடுப்பதுதான் அறிவுடைச் செய்கை என்று கூறும் கவிநயம் சிறப்புடைத்து.

97. ஞானமுனி : தத்துவஞானியாகிய சதானந்தர். நாண் : நாணம். கோன் : அரசனாகிய சனகன். இவனின் : இவனைக்காட்டிலும். மானவன் : பெருமையுடையோனாகிய இராமன். சிலை : வில். கால் வளையானேல் : இரு முனைகளையும் வளையாமற் போவானால். பீன தனத்தவள் : பருவமங்கையாகிய சீதை. பேறு இலள் : நல் மணவாழ்வை இழந்தவளாவாள்.

## நாகம் நாண நடந்தான்

தோகையர் இன்னன
    சொல்லிட, நல்லோர்
ஓகைவி ளம்பிட,
    உம்பர்உ வப்ப,
மாகம டங்கலும்
    மால்விடை யும்பொன்
நாகமும் நாகமும்
    நாண நடந்தான். 98

## ஏடு அவிழ் மாலை

ஆடக மால்வரை
    அன்னது தன்னை,
தேடரு மாமணிச்
    சீதையெ னும்பொன்
சூடக வால்வளை
    சூட்டிட நீட்டும்
ஏடவிழ் மாலைஇது
    என்ன, எடுத்தான். 99

---

98. தோகையர் : மயில் போன்ற சாயலையுடைய மாதர். இன்னன: இவை போல்பனவற்றை. ஓகை விளம்பிட : வாழ்த்துரை வழங்கிட. உம்பர் : தேவர். உவப்ப : மகிழ்ச்சியடைய. மாகமடங்கல் : சீரிய சிங்கம். மால்விடை : பெரிய இடபம். பொன்நாகம் : மேருமலை. நாகம் : யானை. தோற்றப் பொலிவுடன் தயரத ராமன் மிடுக்குடன் நடந்து சென்றதைக் கண்டோரின் இதய ஒலிகளில் இராமகாதையின் மையத்தை உணர்ந்து நாம் மகிழலாம்.

99. ஆடகம் : பொன். மால்வரை : பெரிய (மேரு) மலை. (இங்கே சிவதனுசை மேருமலைக்கு ஒப்பிடுகிறார்; மேருமலை போல் கிடக்கிறது வில் என்பர்.) தேடரு மாமணிச் சீதை : தேடிப் பெறுதற்கு அருமையான இரத்தினமாகிய சீதை. பொற் சூடக வால்வளை : பொற்காப்பும் வெண்மையான சங்கு வளையலும் அணிந்த பெண்ணாகிய சீதை. சூட்டிட : சூட்டுவதற்காக ஏடு அவிழ்மாலை : இதழ் விரிந்த மாலை. வில்லை எடுத்தது, சீதைக்குச் சூட்டப்போகும் மணமாலையை எடுத்தது போன்றிருந்தது என்பர்.

## இற்றது கேட்டார்

தடுத்துஇமை யாமல்
இருந்தவர் தாளின்
மடுத்ததும் நாண்நுதி
வைத்ததும் நோக்கார் ;
கடுப்பினில் யாரும்
அறிந்திலர் ; கையால்
எடுத்தது கண்டனர் ;
இற்றது கேட்டார். 100

## நல்வினை பயந்தது

பூமழை சொரிந்தார் விண்ணோர்;
பொன்மழை பொழிந்த மேகம்;
பாமமா கடல்கள் எல்லாம்
பல்மணி தூவி ஆர்த்த ;
கோமுனிக் கணங்கள் எல்லாம்
கூறின ஆசி ; கொற்ற
நாமவேல் சனகற்கு, இன்று
நல்வினை பயந்தது என்றே. 101

100. தடுத்து இமையாமல் : கண்களைக் கொட்டாமல் தடுத்து இமை யாமல். இருந்தவர் : அவையோர். தாளில் மடுத்ததும் : (இராமன்வில்லின்) அடி நுனியில் காலை வைத்து அழுத்தியதை யும். நாண்நுதி வைத்ததும் : நாணினை மேல் நுனியில் பூட்டி யதையும். நோக்கார் : கண்டார்களல்லர். கடுப்பினில் : வேகத்தில். இற்றது : முறிந்தது. பாடலின் நலன் படித்துப் படித்துப் பரவசப்படத் தக்கது.

101. விண்ணோர் : தேவர்கள். பொன்மழை : பொன் போன்ற மழை. பாம மாகடல்கள் : ஒளி பொருந்திய பெருங்கடல்கள். பல் மணி தூவி ஆர்த்த : பலவகை மணிகளைச் சிதறி ஆரவாரித்தன. கோமுனிக் கணங்கள் : தலைமை பெற்ற முனிவர் கூட்டம். கொற்ற நாமவேல் சனகற்கு : வெற்றி பொருந்தியவனும், பகைவர்க்கு அச்சமூட்டுகின்ற வேலையுடையவனுமான சனக மன்னனுக்கு. நல்வினை பயந்தது : புண்ணியத்தால் ஆன நன்மை கிடைத்துவிட்டது. கடலுக்கு இரத்தினாகரம் என்ற பெயருண்டு; அதனால் பாம மாகடல் என்றார்.

## ஒலிநகர் கிளர்ந்தது

மாலையும், இழையும், சாந்தும்,
சுண்ணமும், வாச நெய்யும்,
வேலைவெண் முத்தும், பொன்னும்,
காசும்,நுண் துகிலும் வீசி ;
பால்வளை, வயிர்கள் ஆர்ப்ப,
பல்இயம் துவைப்ப ; முந்நீர்
ஓல்கிளர்ந்து உவாஉற் றென்ன
ஒலிநகர் கிளர்ந்தது அன்றே. 102

## கடவுளே காணும் !

தயரதன் புதல்வன் என்பார்;
தாமரைக் கண்ணன் என்பார்;
புயல்இவன் மேனி என்பார்;
பூவையே பொருவும் என்பார் ;
மயல்உடைத்து உலகம் என்பார்;
மானிடன் அல்லன் என்பார்;
கயல்பொரு கடலுள் வைகும்
கடவுளே காணும் என்பார். 103

---

102. மாலை : மலர்மாலை. இழை : நகை. சாந்து : சந்தனம். சுண்ணம் : வாசனைப்பொடி. வாசம் : மணம். வேலை வெண் முத்து : கடலிற் பிறந்த வெண்மையான முத்து. காசு : நாணயம். நுண்துகில் : மெல்லிய ஆடை. பால்வளை : வெண் சங்கு. வயிர்கள் ஆர்ப்ப : ஊது குழல்கள் ஒலிக்க. இயம் : இசைக்கருவி. துவைப்ப : முழங்க. முந்நீர் : கடல். ஓல் கிளர்ந்து : ஒலியுடன் ஆரவாரித்து. உவா உற்றென்ன : பருவ காலம் வந்ததென. (பௌர்ணமி நிலவைக் கண்டது போல). கிளர்ந்தது : எழுந்தது.

103. தாமரைக் கண்ணன் : தாமரை போன்ற திருக்கண்களையுடையவன். இவன் மேனி புயல் : இவனுடைய (இராமனது) உடல் வண்ணம் மேகம் போன்றது. பூவையே பொருவும் : காயா மலரை ஒத்திருக்கின்றது. மயல் : மயக்கம். கயல் பொரு : கயல் மீன் மிகுந்த. கடலுள் வைகும் : பாற்கடலில் கண்வளரும். கடவுளே : தெய்வமாகிய திருமாலே.

## முனிவரை இறைஞ்சும்

நம்பியைக் காண நங்கைக்கு
ஆயிரம் நயனம் வேண்டும்;
கொம்பினைக் காணும் தோறும்
குரிசிற்கும் அன்ன தேயாம்;
தம்பியைக் காண்மின்! என்பார்;
தவம்உடைத்து உலகம் என்பார்;
இம்பர்இந் நகரில் தந்த
முனிவனை இறைஞ்சும் என்பார். 104

## ஆவி காணல் ஆகுமே ?

நாண்உ லாவு மேருவோடு
நாண்உ லாவு பாணியும்
தூண்உ லாவு தோளும்,வாளி
யூடுஉ லாவு தூணியும்
வாள்நி லாவின் நூல்உலாவும்
மாலை மார்பும் மீளவும்
காணல் ஆகும்? ஆகின்,ஆவி
காணல் ஆகு மேகொலாம். 105

---

104. நம்பி : இராமன். நங்கை : சீதை. நயனம் : கண். கொம்பு : பூங்கொம்பு போன்ற சீதை. குரிசில் : ஆண்களிற் சிறந்தவனை இராமன். தம்பி : இலக்குவன். இம்பர் : இவ்வுலகில். முனிவன் : விசுவாமித்திர முனிவன். இராமனின் திருவுருவப் பேரெழிலை மிதிலை மக்கள் பேசும் தன்மையையும், இராமனை யும் சீதையையும் இணைத்து அவர்களின் எழில் நலம் பேசும் தன்மையையும், எழுதரிய ஓவியமாக அமைத்துள்ள கம்பனின் பாடற்சிறப்புக்கள் புலவர்க்குப் பெருவிருந்து.

105. நாண் உலாவு : நாண் கயிறு பொருந்திய. மேருவோடு : மேரு மலை போன்ற வில்லுடனே. நாண் உலாவுபாணி : நாணியில் உலாவுகின்ற கை. தூண் உலாவுதோள் : தூணை போன்ற தோள். வாளி ஊடு உலாவு தூணி: அம்புகள் நிறைந்து செருகப் பெற்ற அம்பறுத்தூணி. வாள் நிலாவின் நூல் உலாவும் மாலை மார்பு : ஒளியுள்ள நிலாப்போலப் பூணூல் அலையும் மாலை மார்பு. மீளவும் : மீண்டும். காணல் ஆகும் : காணக்கிடைக்குமா. ஆவி : உயிர்.

## ஆவியை உண்டது உண்டு

விண்த லம்க லந்திலங்கு
திங்க ளோடு மீதுசூழ்
வண்டுஅ லம்புஅ லங்கல்தங்கு
பங்கி யோடும், வார்சிலைக்
கொண்டல் ஒன்று,இ ரண்டுகண்ணின்
மொண்டு கொண்டுஎன் ஆவியை
உண்டது உண்டுஎன் நெஞ்சில்இன்னும்
உண்டு;அது என்றும் உண்டுஅரோ! 106

## யாவரென்று தேர்கிலேன்

விண்ணு ளேஎ ழுந்தமேகம்
மார்பின் நூலின் மின்னொடுஇம்
மண்ணு ளேஇ ழிந்ததுஎன்ன,
வந்து போன மைந்தனார்
எண்ணு ளேஇ ருந்தபோதும்
யாவ ரென்று தேர்கிலென்;
கண்ணு ளேஇ ருந்தபோதும்
என்கொல் காண்கி லாதவே? 107

106. விண்தலம் கலந்து : வானத்தில் பொருந்தி. இலங்கும் : விளங்கும். திங்களோடு : சந்திரனோடு. மீது சூழ் : மேலே மொய்க்கின்ற. அலம்பு : ஒலிக்கின்ற. அலங்கல் : மாலை. பங்கி : தலைமுடி. வார்சிலைக் கொண்டல் : நீண்ட வில்லைத் தாங்கிய மேகம். மொண்டு : முகந்து. அது என்றும் உண்டு : அப்படி உண்ட உணர்ச்சி (என் நெஞ்சில்) இப்பொழுதும் எப்பொழுதும் நீங்காமல் நிற்கும். இராமனை எண்ணி எண்ணி மயங்கும் சீதையின் மனநிலையும், பாடலின் சந்தக் குழிப்பும் நெஞ்சில் நிலையாக நிற்பவை.

107. விண்ணுளே எழுந்த : வானத்தில் தோன்றிய. நூல் : பூணூல். இழிந்தது : இறங்கியது. மைந்தனார் : அழகனான இராமன். எண்ணுளே : மனத்துள்ளே. தேர்கிலேன் : அறிந்தேனல்லேன் என்கொல் : என்ன காரணமோ? நினைவில் (இராமன்) இருக்கிறான்; யாரென்று தெரியவில்லை! கண்ணில் கண்ட உருவம் காணப்படவில்லை! இதென்ன மாயம் என்று மயங்குகிறாள் மிதிலை மன்னன் மகள்.

### கைகடக்க விட்டேன்

பெய்க டல்பி றந்துஅயல்
பிறக்கொ ணும ருந்துபெற்று
ஐயபொற் கலத்தொடு அங்கை
விட்டுஇ ருந்த ஆதர்போல்,
மொய்கி டக்கும் அண்ணல்தோள்
முயங்கி டாது முன்னமே
கைக டக்க விட்டுஇருந்து
கட்டு ரைப்பது என்கொலோ? 108

### நொய்தின் எய்தினள்

வடங்களும் குழைகளும்
வான வில்லிட,
தொடர்ந்தபூங் கலைகளும்
குழலும் சோர்தர,
நுடங்கிய மின்என
நொய்தின் எய்தினள்,
நெடுந்தடம் கிடந்தகண்
நீல மாலையே. 109

---

108. பெய் கடல் பிறந்து : வளங்களை நிறையத் தரும் (பாற்) கடலில் தோன்றி. அயல் பிறக்கலா மருந்து : வேறிடத்தில் தோன்ற முடியாத அமுது. ஐய : அழகிய. பொற்கலம் : பொன்குடம். அங்கை விட்டு இருந்த : கையிலிருந்து பறிகொடுத்த. ஆதர் : மூடர். மொய் கிடக்கும் : வலிமை தங்கியிருக்கின்ற. அண்ணல் : பெருமையிற் சிறந்த இராமன். முயங்கிடாது : தழுவிக்கொள்ளாது. கைகடக்க : கை நழுவவிட்டு. கட்டுரைப்பது : புலம்புவது. அமுதக் கலசம் போன்ற இராமனைக் கைநழுவவிட்ட முட்டாளானேனே என்று இரங்கிக் கூறும் சீதையின் மனநிலையைப் பாடல் நன்கு படம் பிடித்துக் காட்டுகிறது.

109. வடங்கள் : கழுத்தணியான ஆரங்கள். குழை : காதணி. வான வில்லிட : வானவில்லைப் போலப் பல நிற ஒளிகளை வீச. பூங்குழல் : பூ அணிந்த கூந்தல். கலைகள் : உடைகள். தொடர்ந்து சோர்தர : தொடர்ச்சியாகச் சரிய. நுடங்கிய மின் என : துவண்ட மின்னற்கொடி போல. நொய்தின் : விரைவாக. நெடுந்தடங்கண் : நீட்சியும் பெருமையுமான கண்களையுடைய. நீலமாலை : சீதையின் தோழிகளில் ஒருத்தி.

## ஆடிப்பாடினள்

வந்துஅடி வணங்கிலள்;
வழங்கும் ஓதையள்;
அந்தம்இல் உவகையள்
ஆடிப் பாடினள்;
சிந்தையுள் மகிழ்ச்சியும்
புகுந்த செய்தியும்,
சுந்தரி! சொல்என,
தொழுது சொல்லுவாள். 110

## மதனற்கும் வடிவில் மேன்மையான்

கயரத துரகமாக்
கடலன்; கல்வியன்;
தயரதன் எனும்பெயர்த்
தனிச்செல் நேமியான்,
புயல்பொழி தடக்கையான்,
புதல்வன்; பூங்கணை
மயல்விளை மதனற்கும்
வடிவில் மேன்மையான். 111

---

110. அடிவணங்கிலள் : (சீதையின்) பாதங்களை வீழ்ந்து வணங்கினாளல்லள். வழங்கும் ஓதையள் : குழறிய பேச்சினள். அந்தம் இல் : எல்லையற்ற. உவகையள் : மகிழ்ச்சியுடையவள். சிந்தையுள் : மனத்திற்குள். புகுந்த : நிகழ்ந்த. தோழி நீலமாலையின் உள்ளக் களிப்பும், அவள் மெய்ப்பாடும் பாடலில் துள்ளி விளையாடுகின்றன.

111. கய, ரத, துரக மாக்கடலன் : யானை, தேர், குதிரைப் படைகளை மிகுதியும் படைத்தவன். தனிச்செல் நேமியான் : தனிச் செங்கோல் செலுத்துபவன். புயல்பொழி தடக்கையான் : மாரியைப் போல (வழங்கும்) நீண்ட கையையுடையவன். புதல்வன் : மகன். மயல்விளை மதனற்கும் வடிவில் மேன்மையான் : (மலரம்புகளால்) மையலை உண்டாக்கும் மன்மதனினும் வடிவழகு மிக்கவன்.

## பதிவந்து எய்தினன்




மராமரம் இவைஎன
வளர்ந்த தோளினன்;
அராஅணை அமலன்என்று
அயிர்க்கும் ஆற்றலான்;
இராமன்என் பதுபெயர்;
இளைய கோவொடும்
பராஅரு முனியொடும்
பதிவந்து எய்தினன். 112

## நாண் இனிது ஏற்றினன்

பூண்இயல் மொய்ம்பினன்,
புனிதன் எய்தவில்
காணிய வந்தனன்
என்ன, காவலன்
ஆணையின் அடைந்தவில்
அதனை ஆண்தகை
நாண்இனிது ஏற்றினன் ;
நடுங்கிற்று உம்பரே ! 113

---

112. மராமரம் : (திரட்சியாக வளரும்) மரம். வளர்ந்த : வளர்ச்சி பெற்ற. அரா அணை அமலன் : ஆதிசேடனாகிய படுக்கையில் பள்ளிகொண்டிருக்கும் குற்றமற்ற திருமால். அயிர்க்கும் : ஐயுறும். ஆற்றல் : வல்லமை. இளையகோ : தம்பியாகிய அரச குமாரன். பராஅரு முனி : துதித்தற்கு அருமையான விசுவாமித்திர முனிவர்.

113. பூண் இயல் மொய்ம்பினன் : வலயங்களை அணிந்த தோள்களையுடைய இராமன். புனிதன் : பரிசுத்தனாகிய சிவன். காணிய : காணும் பொருட்டு. காவலன் : சனகராசன். ஆணையின் : கட்டளையினால். ஆண்தகை : ஆண்மைக் குணமுள்ள இராமன். இனிது : எளிதில். உம்பர் : மேலுலகம்.

## முறிந்து வீழ்ந்ததே

மாத்திரை அளவில்தாள்
மடுத்து முன்பயில்
சூத்திரம் இதுஎன,
தோளின் வாங்கினன்;
ஏத்தினர் இமையவர்;
இழிந்த, பூமழை;
வேத்தவை நடுக்குற
முறிந்து வீழ்ந்ததே! 114

## ஐயம் நீங்கினள்

கோமுனி யுடன்வரு
கொண்டல் என்றபின்
தாமரைக் கண்ணினன்
என்ற தன்மையால்,
ஆம்அவ னேகொல்என்று
ஐயம் நீங்கினள்;
பூமிசை விட்டுமண்
பொலிந்த பொற்பினள். 115

114. மாத்திரை : ஒரு நொடிப்போது. தாள்மடுத்து : (வில்லின் ஒரு பக்கத்து முனையை) காலால் மிதித்துக்கொண்டு. முன்பயில் சூத்திரம் : முன்பழகின இயந்திரம். தோளின் வாங்கினன் : தோள் வலிமையால் வளைத்திட்டான். ஏத்தினர் : புகழ்ந்தனர். இழிந்த : பொழிந்த. வேத்தவை : இராசசபை.

115. கோமுனி : முனிவர் தலைவனை விசுவாமித்திரர். கொண்டல் : மேகம் போன்ற நிறத்தான். தாமரைக் கண்ணினன் : கமலக்கண்ணன். அவனே கொல் : (தன் மனத்திலே காணும்) அவனே போலும். ஐயம் : சந்தேகம். பூமிசைவிட்டு மண் பொலிந்த பொற்பினள் : தாமரை மலர் மேலிருப்பதை நீங்கி, பூமி ஒளிவிட அவதரித்த அழகுடைய சீதை.

## அழைத்தல் வேட்கையோ ?

உரைசெய்எம் பெரும!உன்
புதல்வன் வேள்விதான்,
விரைவின்இன்று ஒருபகல்
முடித்தல் வேட்கையோ?
முரசுஎறிந்து அதிர்கழல்
முழங்கு தானைஅவ்
அரசையும் இவ்வழி
அழைத்தல் வேட்கையோ ? 116

## தூதும் போக்கினன்

மல்வலான் அவ்வுரை
பகர, மாதவன்,
ஒல்லையில் அவனும்வந்—
துறுதல் நன்றுஎன,
எல்லையில் உவகையான்,
இயைந்த வாறுஎலாம்
சொல்லுகஎன்று ஓலையும்
தூதும் போக்கினன். 117

---

116. எம்பெரும : எம் பெருமானாகிய விசுவாமித்திரரே. உன் புதல்வன் : உன்னுடைய புதல்வனான இராமன். (ஞான பிதா என்ற தன்மையில் இங்ஙனம் பேசப்படுகிறது). வேள்வி : (இங்கே) திருமணம். இன்று ஒரு பகல் : இன்றைய தினமே. வேட்கையோ : விருப்பமா. முரசு எறிந்து : திருமணமுரசினை அறைவித்து. அதிர் கழல் முழங்குதானை அவ்அரசு : ஒலியுள்ள வீரக்கழலையும், ஆரவாரமிக்க படைகளையுமுடைய அந்தத் தயரதமன்னன்.

117. மல்வலான் : மற்போரில் வலிய சனகராசன். பகர : கூற. மாதவன் : விசுவாமித்திரன். ஒல்லையில் : விரைவாக. அவனும் : தயரதனும். வந்து உறுதல் : வந்து சேர்தல். உவகையான் : மகிழ்ச்சிகொண்டவனான சனகன். இயைந்தவாறு : நடந்த விவரங்களை. ஓலை : திருமணஓலை. போக்கினன் : விடுத்தான்.

### வாயில் முன்னினர்

கடுகிய தூதரும்
காலில் காலின்சென்று,
இடிகுரல் முரசுஅதிர்
அயோத்தி எய்தினர் ;
அடிஇணை தொழஇடம்
இன்றி, மன்னவர்
முடியொடு முடிபொரு
வாயில் முன்னினர். 118

### செல்வனைப் புகழ்ந்தனர்

முகந்தனர் திருவருள்,
முறையின் எய்தினர்;
திகழ்ந்துஒளிர் கழல்இணை
தொழுது, செல்வனைப்
புகழ்ந்தனர்; அரச ! நின்
புதல்வர் போயபின்
நிகழ்ந்ததை இதுஎன
நெடிது கூறினர். 119

---

118. கடுகிய : விரைந்து சென்ற. காலில் : காலால். காலின் : காற்றைப் போல். இடிகுரல் முரசு அதிர் அயோத்தி : இடியின் குரலைப் போல முரசு முழங்கு அயோத்திநகர். அடிஇணை : (தயரதனின்) இரண்டு பாதங்கள். முடியொடு முடிபொரு : (வணங்குதற்கு வந்த சிற்றரசர்களின்) முடிகளோடு முடிக தாக்கும். வாயில் : அரண்மனைவாயில்.

119. திருவருள் முகந்தனர் : (அரண்மனை வாயிலையடைந்த தூதர்கள்) தயரதனின் திருவருளைப் பெற்றவர்களாய். முறையின் : செல்லவேண்டிய முறைப்படி. திகழ்ந்து ஒளிர் : மிகவும் விளங்குகிற. செல்வனை : தயரதனை. புதல்வர் : இராம-இலக்குவர். நிகழ்ந்ததை : நிகழ்ந்த செயல். நெடிது : விரித்து

### 'வாசி' என்றனன்

கூறிய தூதரும்
　　கொணர்ந்த ஓலையை
'ஈறுஇல்வண் புகழினாய்!
　　இதுஅது' என்றனர்;
வேறுஒரு புலமகன்
　　விரும்பி வாங்கினன்;
மாறுஅதிர் கழலினன்,
　　'வாசி' என்றனன். 120

### வளர்ந்தன தோள்கள்

இலைமுகப் படத்துஅவன்
　　எழுதிக் காட்டிய
தலைமகன் சிலைத்தொழில்
　　செவியில் சார்தலும்,
நிலைமுக வலையங்கள்
　　நிமிர்ந்து நீங்கிட,
மலைஎன வளர்ந்தன
　　வயிரத் தோள்களே. 121

---

120. கூறிய : (இராமனது வீரச்செயலை) எடுத்துச் சொன்ன. ஈறுஇல்: முடிவில்லாத. வண்புகழினாய் : செழித்த புகழுடையோனே. இது அது : இதுதான் அந்த ஓலை. வேறு ஒரு புலமகன் : தனியாக நியமிக்கப்பட்ட (ஓலை வாசிப்போனாகிய) ஒரு அறிஞன். மாறு அதிர் கழலினன் : மாற்றார் அதிர்ச்சியுறும் வீரக் கழலணிந்த தயரதச் சக்கரவர்த்தி.

121. இலைமுகப் படத்து : பனையோலையின் மேல். அவன் : சனக மன்னன். தலைமகன் : மூத்த மகனாகிய இராமன். சிலைத் தொழில் : வில் வித்தையின் திறம். சார்தலும் : பட்டவுடனே. நிலை முகவலையங்கள் நிமிர்ந்து நீங்கிட : நிலையான இடத்தைக் கொண்ட தோள் வளைகள் வாய் விண்டு கழன்று போகுமாறு. வயிரத்தோள்கள் : வயிரம் போன்ற உறுதியான தோள்கள்.

## மூரிவில் இற்ற ஒலி

வெற்றிவேல் மன்னவன்,
 'தக்கன் வேள்வியில்
கற்றைவார் சடைமுடிக்
 கணிச்சி வானவன்,
முற்றஏழ் உலகையும்
 வென்ற மூரிவில்
இற்றபேர் ஒலிகொலாம்
 இடித்தது ஈங்கு ?' என்றான். 122

## தூதர் கொள்க!

என்றுஉரைத்து, எதிர்எதிர்
 இடைவி டாது,'நேர்
துன்றிய கனைகழல்
 தூதர் கொள்க' என,
பொன்திணி கலங்களும்
 தூசும் போக்கினன்;
குன்றுஎன உயரிய
 குவவுத் தோளினன். 123

---

122. மன்னவன் : தயரதன். கற்றைவார் சடை முடிக் கணிச்சி வானவன் : தொகுதியான நீண்ட சடை முடியையும், மழுவையுமுடைய கடவுளாகிய சிவபெருமான். முற்ற : முழுதும். மூரிவில் : வலிமை பெற்ற வில். இற்ற : முறிந்த. மிதிலையில் இராமனால் முறிக்கப் பெற்ற சிவதனுசின் ஓசை அயோத்தியில் கேட்டதாம் !

123. எதிர் எதிர் : (வசிட்டர் முதலானோர்) முன்னிலையில். இடைவிடாது : இடையில்லாது. நேர்துன்றிய : முன்னேவந்தடைந்த. கனைகழல் தூதர் : ஒலிக்கின்ற வீரக்கழலை அணிந்த தூதர்கள். பொன் திணி கலங்கள் : பொன்னாலான உறுதியான அணிகள். தூசு : ஆடை. போக்கினன் : கொடுப்பித்தான். குவவுத் தோளினன் : குவிந்த தோள்களையுடைய தயரதன்.

### மணமுரசு அறைக!

வானவன் குலத்துஎமர்
வரத்தி னல்வரும்
வேனில்வேள் இருந்தஅம்
மிதிலை நோக்கி,நம்
சேனையும் அரசரும்
செல்க, முந்து!என
'ஆனைமேல் மணமுரசு
அறைக!' என்று ஏவினன். 124

### பரிவுடன் நல்கிப் போனன்

நித்திய நியமம் முற்றி,
நேமியான் பாதம் சென்னி
வைத்தபின் மறைவல் லோர்க்கு
வரம்புஅறு மணியும் பொன்னும்
பத்திஆன் நிரையும் பாரும்,
பரிவுடன் நல்கிப் போனன்,
முத்துஅணி வயிரப் பூணன்,
மங்கல முகிழ்த்த நல்நாள். 125

---

124. வானவர் குலம் : சூரிய குலம். எமர் : எம் முன்னோர். வரும் : பிறந்த. வேனில் வேள் : மன்மதனை ஒத்த இராமன். முந்து : முன்னே. மண முரசு : திருமணத்தை அறிவிக்கும் முரசு. ஏவினன் : கட்டளையிட்டான்.

125. நியமம் : கருமம். முற்றி : முடித்துக்கொண்டு. நேமியான் : திரு ஆழியை ஏந்திய திருமால். சென்னி : தலை. வைத்த : சூடிய. மறைவல்லோர் : வேதங்களில் வல்லோர். வரம்பு அறு : எல்லையற்ற. பத்தி ஆன் நிரை : வரிசையான பசுக் கூட்டங்கள். பரிவுடன் : அன்புடன். நல்கி : அளித்து. முத்து அணி வயிரப் பூணன் : முத்துக்களாலும் அழகிய வயிர மணி களாலும் இயன்ற ஆபரணங்களையுடைய தயரதன். முகிழ்த்த : கூடிய.

## இசைபரவிப் போனார்

இருபிறப் பாளர் எண்ணு-
-யிரர்,மணிக் கலசம் ஏந்தி,
அருமறை வருக்கம் ஓதி,
அறுகுநீர் தெளித்து வாழ்த்த;
வரன்முறை வந்தார், கோடி
மங்கல மழலைச் செவ்வாய்ப்
பருமணிக் கலாபத் தார்,பல்-
-லாண்டுஇசை பரவிப் போனார். 126

## விண்ணும் மண்ணுலகு ஆயது.

நோக்கிய திசைகள் தோறும்
தன்னையே நோக்கிச் செல்லும்
வீக்கிய கழற்கால் வேந்தர்
விரிந்தகைம் மலர்கள் கூம்ப,
தாக்கிய களிறும் தேரும்
புரவியும் படைஞர் தாளும்
ஆக்கிய தூளி, விண்ணும்
மண்ணுலகு ஆக்கப் போனன். 127

---

126. இரு பிறப்பாளர் : அந்தணர். மணிக்கலசம் : இரத்தினம். பதித்த குடம். வருக்கம் : கூட்டம். அறுகுநீர் தெளித்து: அறுகம்புல் வைத்த கலச நீரைத் தெளித்து. வரன்முறை : முறைப்படி. மங்கல மழலைச் செவ்வாய்ப் பருமணிக் கலா பத்தார் : மங்கலமான மழலைச் சொல்லைப் பேசுகின்ற சிவந்த வாயையும், பருத்த மாணிக்கங்களாலான மேகலையையும் உடைய பெண்கள். பரவி : பாராட்டிக் கூறி.

127. நோக்கிய : (தயரதன்) பார்த்த. தன்னையே நோக்கி : தயரதனையே (மற்றையோர்) பார்த்து. வீக்கிய : இறுகக் கட்டிய. கழற்கால் வேந்தர் : வீரக்கழலணிந்த காலையுடைய அரசர்கள். விரிந்த கைம் மலர்கள் : விரிந்த கைகளாகிற தாமரை மலர்கள். கூம்ப : குவிய. தாக்கிய : மோதிக் கொண்டு செல்கின்ற. களிறு : யானை. புரவி : குதிரை. ஆக்கிய : விளைந்த. ஆக்க : ஆகுமாறு. புழுதி மேலோங்கிப் பரவவே விண்ணுலகமும் மண்ணுலகாகியது !

## எதிர்கொள எழுந்து வந்தான்.

வந்தனன் அரசன் என்ன,
மனத்துஎழும் உவகை பொங்க
கந்துஅடு களிறும் தேரும்
கலினமாக் கடலும் சூழ,
சந்திரன் இரவி தன்னைச்
சார்வதுஓர் தன்மை தோன்ற,
இந்திர திருவன் தன்னை
எதிர்கொள்வான் எழுந்து வந்தான். 128

## பாற்கடல் வந்தது

கங்கைநீர் நாடன் சேனை,
மற்றுள கடல்கள் எல்லாம்
சங்குஇனம் ஆர்ப்ப வந்து
சார்வன போலச் சார,
பங்கயத்து அணங்கைத் தந்த
பாற்கடல் எதிர்வ தேபோல்;
மங்கையைப் பயந்த மன்னன்
வளநகர் வந்தது அன்றே. 129

---

128. வந்தனன் அரசன் என்ன : (தயரதன் மிதிலையை) அடைந்தனன் என்றவுடன். உவகை பொங்க : மகிழ்ச்சி மேலிட. கந்து அடுகளிறும் : கட்டுத்தறியை முறிக்கின்ற ஆண் யானைகளும். கலினமா : கடிவாளம் பூண்ட குதிரை. இரவி : சூரியன். சார்வது : சென்றணைவது. இந்திரதிருவன் : இந்திரனை ஒத்த செல்வமுடையவனான தயரதன். எதிர் கொள்வான் : வரவேற்கும் பொருட்டு.

129. கங்கை நீர் நாடன் : கங்கை நதி பாயும் கோசல நாட்டுத் தலைவனாகிய தயரத மன்னன். மற்றுள கடல்கள் : பாற்கடல் ஒழிந்த ஏனைய கடல்கள். சங்கினம் ஆர்ப்ப : சங்கத் தொகுதிகள் ஒலிக்க. வந்து சார்வன போல : வந்து அடைவன போல. சார : அடைய. பங்கயத்து அணங்கு : தாமரையில் (வீற்றிருக்கும்) திருமகள். தந்த : உதவிய. மங்கை : சீதை. பயந்த : பெற்ற. மன்னன் : சனகன். வளநகர் : வளமிக்க மிதிலை மக்கள்.

### தேரின் வந்து எய்தினன்

கந்தையே பொருகரிச்
சனகனும் காதலோடு
உந்த,ஓத அரியதுஓர்
தன்மையோடு உலகுஉளோர்
தந்தையே அனையஅத்
தகவினன் முன்பு,தன்
சிந்தையே பொருநெடுந்
தேரின்வந்து எய்தினன். 130

### அகம் உறத் தழுவினன்

எய்தி,அத் திருநெடுந்
தேர்இழிந்து இனியதன்
மொய்கொள்திண் சேனை,பின்
நிற்க,முன் சேறலும்,
கையின்வந்து 'ஏறு'என,
கடிதின்வந்து ஏறினன்;
ஐயனும் முகம்மலர்ந்து
அகம்உறத் தழுவினன். 131

130. கந்தையே பொரு கரிச் சனகன் : கட்டுத் தறியை மோதுகிற யானைகளையுடைய சனக மன்னன். உந்த : செலுத்த. ஓத அரியது ஓர் தன்மையோடு : இத்தன்மைத்து என்று எடுத்துக் கூறற்கரிய தன்மையுடன். தகவினன் : தகுதியையுடைய தயரத மன்னன். சிந்தையே பொரு : (வேகத்தால்) மனத்தையே ஒத்த. எய்தினன் : வந்தடைந்தான். மூவுலகும் ஈன்ற பிரமனை ஈன்ற இராமனுக்குத் தந்தையான தயரதனை 'உலகுளோர் தந்தை' எனக் கூறுகிறார் கவிஞர்.

131. இழிந்து : இறங்கி. மொய்கொள் திண் சேனை : வன்மை வாய்ந்த உறுதியான சேனை. முன் சேறலும் : முன்னே நடக்கவும். கையின் வந்து : கைகொடுத்து வந்து. கடிதின் : விரைவாக. தேரிலிருந்து இறங்கிய தயரதன் சனகனை நோக்கி முன்னே சென்று அவனைக் கை கொடுத்துத் தேரில் ஏறச் சொன்னான். அவ்வாறு ஏறியதும் முகமலர்ந்து சனகனைத் தழுவிக்கொண்டான்.

## புயம் நிமிர்த்து அருளினன்

இன்னவாறு இருவரும்
இனியவாறு ஏக,அத்
துன்னுமா நகரின்நின்று
எதிர்வரத் துன்னினன் ;
தன்னையே அனையவன்
தழலையே அனையவன்
பொன்னின்வார் சிலைஇறப்
புயம்நிமிர்த்து அருளினன். 132

## தொழ உளான்

தம்பியும் தானும்அத்
தானைமன் னவன்நகர்ப்
பம்புதிண் புரவியும்
படைஞரும் புடைவர,
செம்பொனின் பசுமணித்
தேரின்வந்து எய்தினன் ;
உம்பரும் இம்பரும்
உரகரும் தொழஉளான். 133

132. இருவரும் : தயரதனும் சனகனும். ஏக : செல்ல. துன்னுமா நகரின் : நெருங்கிய சிறந்த மிதிலையினின்றும். எதிர்வரத் துன்னினன் : (தன் தந்தையாகிய தயரதனை) எதிர்கொண்டு அழைத்து வர நெருங்கினன். அனையவன் : ஒத்தவன். தழலையே அனையவன் : நெருப்பையே நிகர்த்த சிவபெருமான். பொன்னின் வார்சிலை : பொன்மலையாகிய மேருவை ஒத்த நீண்ட வில். இற : ஒடியுமாறு. புயம் : தோள். நிமிர்த்து அருளியவன் : நிமிர்த்து அருளிய இராமன்.

133. தம்பி : இலக்குவன். தானும் : இராமனும். தானை மன்னவன் : சேனையையுடைய சனக மன்னன். பம்புதிண் புரவி : பரந்த வலிய குதிரைப் படை. படைஞர் : காலாட் படை. புடை வர : சுற்றிவர. பசு மணித் தேர் : மரகத மணிகள் இழைத்த தேர். உம்பர் : விண்ணோர். இம்பர் : இவ்வுலகத்தோர். உரகர் : கீழ் உலகத்தோர். தொழ உளான் : வணங்க நின்றவனாகிய இராமபிரான்.

## அரசன்மாடு அணுகினன்

காவியும், குவளையும்
கடிகொள்கா யாவும்ஒத்து
ஓவியம் சுவைகெடப்
பொலிவதுஓர் உருவொடே,
தேவரும் தொழுகழல்
சிறுவன்,முன் பிரிவதுஓர்
ஆவிவந் தென்னவந்து
அரசன்மாடு அணுகினன். 134

## உயிர்உறப் புல்லினன்

உன்னுபேர் அன்புமிக்கு
ஒழுகிஒத்து ஒண்கண்நீர்
பன்னுதா ரைகள்தரத்
தொழுதுஎழும் பரதனை,
பொன்னின்மார்பு உறஅணைத்து
உயிர்உறப் புல்லினன்,
தன்னைஅத் தாதைமுன்
தழுவினன் என்னவே. 135

---

134. காவி : நீலோற்பல மலர். குவளை : கருங்குவளை மலர். கடி கொள் காயா : மணமுள்ள காயாம்பூ. ஒத்து : போன்ற (நிறத்துடன்). ஓவியம் சுவைகெடப் பொலிவது ஓர் உருவொடே: சித்திரமும் அழகில்லை என்று தோன்றுகின்றவாறு ஒப்பற்ற வடிவத்துடன். சிறுவன் : இளங்குமரனாகிய இராமன். பிரிவது ஓர் ஆவி : விட்டு நீங்கிய உயிர். அரசன் மாடு : தயரதன் பக்கத்தில். விசுவாமித்திரனுடன் இராமனைக் காட்டிற்கு அனுப்பும்போது, 'மன்னன் இன்னுயிர் வழிக் கொண்டால்' எனக் கூறி, இப்போது 'பிரிவது ஓர் ஆவி வந்தென்ன' என்று அமைத்துள்ள நயம் சிறப்புடைத்து.

135. உன்னு பேர் அன்புமிக்கு : நினைக்கும் தன்மையுள்ள பெரிய அன்பு மிகுந்து. ஒழுகி ஒத்து : ஒழுகுவதைப் போல. ஒண் கண் : ஒளி பொருந்திய கண்கள். நீர் பன்னுதாரைகள்: (அன்பின் அறிகுறி) என்னுமாறு நீர் தாரைகள். பொன்னின் : அழகிய. உற : ஒன்றுமாறு. புல்லினன் : தழுவினன். தாதை : தயரதன். பரதனை இராமன் தந்தைப் பாசத்துடன் தழுவினன்.

### இருவரும் வருடினர்

கரியவன் பின்புசென்—
றவன்அருங் காதலின்
பெரியவன் தம்பிஎன்று
இனையதுஓர் பெருமைஅப்
பொருவுஅருங் குமரர்தம்
புனைநறுங் குஞ்சியால்
இருவர்பைங் கழலும்வந்து
இருவரும் வருடினர். 136

### நான்மறை எனும் நடையினர்

கோல்வரும் செம்மையும்
குடைவரும் தண்மையும்
சால்வரும் செல்வம்என்று
உணர்பெருந் தாதைபோல்
மேல்வரும் தன்மையால்
மிகவிளங் கினர்கள்தாம்
நால்வரும் பொருஇல்நான்
மறைஎனும் நடையினர். 137

136. கரியவன் : கருநிறவண்ணனான இராமன். சென்றவன் : இலக்குவன். பெரியவன் தம்பி : மூத்தோனான இராமன் தம்பியாகிய பரதன். பொருவு அரும் குமரர் : நிகரற்ற இளைஞரான இலக்குவனும் சத்துருக்கனும். புனை நறும் குஞ்சியால் : (மலரால்) அழகு செய்யப் பெற்ற நறுமணம் தங்கிய தலைமுடியால். இருவரது : இராமனுடையவும் பரதனுடையவுமான. பைங்கழல் : பசிய பொன்னாற் செய்த வீரக் கழலணிந்த திருவடிகள். வருடினர் : (இங்கே) வணங்கினார்கள். இலக்குவன் பரதனையும், சத்துருக்கன் இராமனையும் வணங்கினர் என்பது கருத்து.

137. கோல் வரும் செம்மையும் : செங்கோலால் விளையும் நீதியும். குடை வரும் தண்மையும் : வெண் கொற்றக் குடையினால் விளையும் தண்ணளியும். சால்வரும் செல்வம் : அமைந்த நிறைந்த செல்வம். தாதை : தந்தையாகிய தயரதன். மேல் வரும் தன்மை : மேன்மை பெற்றொளிரும் தன்மை. பொரு இல் : உவமையற்ற. நான் மறை : நால் வேதங்கள். நடையினர் : ஒழுக்கமுடையோர்.

### புகுந்து மொய்த்தார்

மானினம் வருவ போன்றும்,
　　மயில்இனம் திரிவ போன்றும்,
மீனினம் மிளிர வானில்
　　மின்இனம் மிடைவ போன்றும்,
தேன்இனம் சிலம்பி ஆர்ப்ப,
　　சிலம்புஇனம் புலம்பி ஏங்க,
பூநனை கூந்தல் மாதர்
　　பொம்மெனப் புகுந்து மொய்த்தார். 138

### நீங்குமின் நீங்குமின்

விரிந்துவீழ் கூந்தல் பாரார் ;
　　மேகலை அற்ற நோக்கார் ;
சரிந்தபூந் துகில்கள் தாங்கார் ;
　　இடைதடு மாறத் தாழார் ;
நெருங்கினர்; நெருங்கிப் புக்கு;
　　'நீங்குமின் நீங்கு மின்' என்று
அருங்கலம் அனைய மாதர்
　　தேன்நுகர் அளியின் மொய்த்தார். 139

---

138. மான் இனம் : மான் கூட்டங்கள். மீனினம் : நட்சத்திரக் கூட்டங்கள். மிளிர : விளங்க. மின் : மின்னல். மிடைவ : நெருங்குவ. தேன் இனம் : வண்டுக் கூட்டங்கள். சிலம்பி ஆர்ப்ப : இரைந்து ஆரவாரிக்க. சிலம்பு இனம் : சிலம்புகளும் அவற்றின் இனமான பிற காலணிகளும். புலம்ப : ஒலிக்க. பூ நனை கூந்தல் மாதர் : (தேனால்) ஈரமாகியுள்ள பூக்களில் சூடிய கூந்தலையுடைய (மிதிலை) மகளிர். பொம்மென : விரைந்து. மொய்த்தார் : கூடினர். பாடலின் ஓசை நயம், பொருளாழம் முதலியவை திரும்பத் திரும்ப ஓதும் தன்மைத்து.

139. விரிந்து : கட்டவிழ்த்து. வீழ் : (நிலத்தில்) இழுபடும். மேகலை : ஒட்டியாணம். அற்ற : அறுந்ததை. சரிந்த : நழுவிய. பூந்துகில்கள் : அழகிய முன்தானைகள். தாங்கார் : போட்டுக் கொள்ள நினைக்கவில்லை. தடுமாற : தள்ளாடுதற்கு. தாழார் : தாமதியார். அருங்கலம் அனைய மாதர் : அரிய அணிகலன் போன்ற பெண்கள். நுகர் : பருகும். இராமனைக் காணப் பெண்கள் வண்டைப் போல் பறந்து வந்தனராம். அவ்வேகத்தில் தங்கள் ஆடை, அலங்காரம், கூந்தல் இவைகள் தம் நிலையில் இல்லாமற்போனவற்றையும் கவனித்தாரிலர்.

### உள்ளத்தைப் பிடித்தும் நாம்

பள்ளத்துப் பாயும் நல்நீர்
அனையவர், பானல் பூத்த
வெள்ளத்துப் பெரிய கண்ணார்,
மென்சிலம்பு அலம்ப, மென்பூத்
தள்ள,தம் இடைகள் நோவ
தமைவலித்து, 'அவன்பால் செல்லும்
உள்ளத்தைப் பிடித்தும் நாம்'என்று
ஓடுகின் றாரும் ஒத்தார். 140

### மறுகினில் வீழும் மாதர்

அரத்தம்உண் டனைய மேனி
அகலிகைக்கு அளித்த தாளும்,
விரைக்கருங் குழலிக் காக
வில்இற நிமிர்ந்து வீங்கும்
வரைத்தடம் தோளும் காண,
மறுகினில் வீழும் மாதர்,
இரைத்துவந்து அமிழ்தின் மொய்க்கும்
ஈஇனம் என்னல் ஆனார். 141

---

140. பள்ளத்துப் பாயும் : கடலிலே பாயும். அனையவர் : ஒத்தவர். பானல் : நீலமலர். வெள்ளத்துப் பெரிய கண்ணார் : கடலைக் காட்டிலும் பெரிய கண்களை உடையவர். அலம்ப : ஒலிக்க. பூத்தள்ள : பூமாலைகள் அசைய. வலித்து : இழுத்து. பிடித்தும் : பிடிப்போம். மகளிர் தம் உள்ளத்தைப் பிடிக்க ஓடுதல் போல் சென்று, அவ்வுள்ளம் அடைந்துவிட்ட இராம னிடம் ஓடினார் என்பதாம்.

141. அரத்தம் உண்டனைய மேனி : செந்நிறத்தை உட்கொண்டாற் போன்ற வடிவு. அளித்த : அருளிய. தாளும் : திருவடியும். விரைக் கருங்குழலி : மணமுள்ள கரிய கூந்தலையுடைய சீதை. நிமிர்ந்து வீங்கும் : உயர்ந்து பூரிக்கும். மறுகினில் : வீதியில். வீழும் : வந்தடையும். இரைத்து வந்து : ஆரவாரம் செய்து கொண்டு வந்து. அமிழ்தின் : அமுதத்திலே. ஈஇனம் : ஈக் களின் கூட்டம்.

## யாவர்க்கும் கண்ணன்

வீதிவாய்ச் செல்கின் ருன்போல்
 விழித்துஇமை யாது நின்ற
மாதரார் கண்க ளூடே
 வாவும்மான் தேரில் செல்வான்,
யாதினும் உயர்ந்தோர், தன்னை,
 யாவர்க்கும் கண்ணன் என்றே
ஓதிய பெயர்க்குத் தானே
 உறுபொருள் உணர்த்தி விட்டான். 142

## யாரே வடிவினை முடியக் கண்டார் ?

தோள்கண்டார் தோளே கண்டார் ;
 தொடுகழல் கமலம் அன்ன
தாள்கண்டார் தாளே கண்டார் ;
 தடக்கைகண் டாரும் அஃதே;
வாள்கொண்ட கண்ணார் யாரே
 வடிவினை முடியக் கண்டார் ?
ஊழ்கொண்ட சமயத்து அன்னான்
 உருவுகண் டாரை ஒத்தார். 143

142 செல்கின்ருன் போல் : போகின்ருன் போல். இமையாது : (கண்கள்) கொட்டாது. கண்களூடே : கண்களிடத்திலே. வாவும் மான்தேரில் : தாவிப் பாய்கின்ற குதிரைகள் பூட்டிய தேரில். கண்ணன் என்றே ஓதிய பெயர்க்கு : கண்ணன் என்று கூறியுள்ள திருநாமத்துக்கு. உறுபொருள் : தகுந்த பொருள்.

143. இராமனுடைய தோளைக்கண்டவர் தோளைத்தான் பார்த்தார்கள், கழல் —அணிந்துள்ள தாமரை மலர் போன்ற திருவடியைக் கண்டவர் அதனையே பார்த்தார்கள். பெரிய கையைப் பார்த்தவர்களும் அங்ஙனமே. ஒளி பொருந்திய கண்ணைப்பெற்ற, பெண்களில் யார்தான் அவனுடைய வடிவம் முழுமையையும் பார்த்தார்கள் ? முறைமையை ஏற்படுத்திக்கொண்ட மதங்களின் வழியாகக் கடவுளின் உருவத்தைக் காண முனைந்தவர்களைப் போன்றனர். பார்ப்பவரை ஈர்த்து, அவர்களின் கண்களைத் தம்பால் பதிய வைக்கும் உருவப்பேரெழில் பொருந்திய இராமனின் அங்க அழகைக் கம்பர் அற்புதமாகச் சித்திரிக்கிருர்.

### மண்டபம் எய்தினன்

மாதர் இன்னணம்
 மொய்த்திட, வள்ளல்போய்
கோதுஇல் சிந்தை
 வசிட்டனும் கோசிக
வேத பாரனும்
 மேவிய மண்டபம்
ஏதி மன்னர்
 குழாத்தொடும் எய்தினன். 144

### முறையின் இறைஞ்சினன்

திருவின் நாயகன்
 மின்திரிந் தால்எனத்
துருவுஇன் மாமணி
 ஆரம் துயல்வர,
பருவ மேகம்
 படிந்தது போற்படிந்து
இருவர் தாளும்
 முறையின் இறைஞ்சினன். 145

---

144. இன்னணம் : இவ்வாறு. வள்ளல் : இராமன். கோதுஇல் : குற்றமற்ற. கோசிக வேதபாரன் : விசுவாமித்திரன் எனும் வேதத்தைக் கரைகண்ட முனிவன். மேவிய : இருக்கிற. ஏதி : படை. குழாம் : கூட்டம்.

145. திருவின் நாயகன் : இலக்குமி மணாளனை இராமன். மின் : மின்னல். திரிந்தால் : உலாவினால். துருவு இன் மாமணி ஆரம் : ஆராய்ந்தெடுத்துப் பதித்த இனிய சிறந்த இரத்தின ஆரங்கள். துயல்வர : புரளும்படி . படிந்தது போல் : பொருந்துவதைப் போல். படிந்து : தாழ்ந்து. இறைஞ்சினன் : வணங்கினன்.

## தம்பியருள் பொலிந்தான்

இறைஞ்ச, அன்னவர்
ஏத்தினர் ; ஏவ,ஓர்
நிறைஞ்ச பூந்தவிசு
ஏறி, நிழல்கள்போல்
புறஞ்செய் தம்பிய—
—ருள்பொலிந் தான்அரோ.
அறம்செய் காவற்கு
அயோத்தியில் தோன்றினன். 146

## ஓங்கி வளர்ந்த உயர்கீர்த்தி

தீங்க ரும்பினும்
தித்திக்கும் இன்சொலார்
தாங்கு சாமரை
மாடு தயங்குவ,
ஓங்கி ஓங்கி
வளர்ந்துஉயர் கீர்த்தியின்
பூங்கொழுந்து
பொலிவன போன்றவே. 147

---

146. இறைஞ்ச : (இராமன்) வணங்கவும். ஏத்தினர் : வாழ்த்தினர். ஏவ : (உட்காருமாறு) கட்டளையிட. ஓர் நிறைஞ்ச பூந்தவிசு : ஒப்பற்ற நிறைந்த மலர்களால் அலங்கரிக்கப்பட்ட ஆசனம். புறஞ்செய் : காவல் செய்கிற. தம்பியருள் : தம்பிமார்களிடையே. அறம் செய்காவற்கு : தருமத்தைக் காப்பதற்காக. அறம்தலை நிறுத்தவே இராமன் திரு அவதாரம் செய்தான் என்று அடிக்கடி கூறுவர் கம்பர்.

147. தீங்கரும்பினும் : இனிப்பான கரும்புச் சாற்றைக்காட்டிலும். இன்சொலார் : இனிய சொல்லையுடைய பெண்கள். தாங்கு : ஏந்து. மாடு : பக்கங்களிலே. தயங்குவ : விளங்குபவை. கீர்த்தியின் பூங்கொழுந்து : புகழாகிய மரத்தின் அழகான இளந் தளிர்கள். மரம் செழித்தால்தான் கொழுந்துகள் உண்டாகும். தயரதன் புகழ் மரமும் அங்ஙனம் விரிந்து விளங்கியது.

## இராமற்கு ஒத்த அன்பு

ஒழிந்த என்இனி ?
ஒண்ணுதல் தாதைதன்
பொழிந்த காதல்
தொடரப் பொருளெலாம்
அழிந்து மன்றல்கொண்—
டாடலின், அன்புதான்
இழிந்து ளார்க்கும்
இராமற்கும் ஒத்ததே. 148

## மாஇயல் நோக்கினுளைக் கொணர்க

தேவியர் மருங்கு சூழ,
இந்திரன் இருக்கை சேர்ந்த
ஓவியம் உயிர்பெற் றென்ன
உவந்துஅரசு இருந்த காலை,
தாஇல்வெண் கவிகைச் செங்கோல்
சனகனை இனிது நோக்கி,
மாஇயல் நோக்கி னுளைக்
கொணர்க !என வசிட்டன் சொன்னான். 149

---

148. ஒழிந்த : கூறவேண்டிய. ஒண்ணுதல் : ஒளிவீசும் நெற்றியையுடைய சீதை. தாதை : சனகன். பொழிந்த : வரம்பு கடந்துமிகுந்த. அழிந்து : சொரிந்து. மன்றல் கொண்டாலின்: திருமணம் கொண்டாடுவதால். இழிந்துளார் : தாழ்ந்துள்ளோர்.

149. தேவியர் : மனைவியர். மருங்கு : பக்கத்திலே. ஓவியம் : சித்திரம். தாஇல் : குற்றமற்ற. கவிகை : கொற்றக் குடை. மாஇயல் நோக்கினுள் : மாவடுவைப் போன்ற கண்களையுடைய சீதை.

## பெண்ணினுக்கு அரைசி

உரைசெய, தொழுத கையன்,
உவந்தஉள் ளத்தன், 'பெண்ணுக்கு
அரைசியைத் தருதிர் ஈண்டு' என்று
ஆயிழை யவரை ஏவ,
கரைசெயற்கு அரிய காதல்
கடாவிட, கடிது சென்றார்,
பிரைசம்ஒத்து இனிய சொல்லார்,
பேதைதா தியரில் சொன்னார். 150

## ஞாலம் ஏழைமை உடைத்து

அமிழ்இமைத் துணைகள், கண்ணுக்கு
அணிஎன அமைக்கு மாபோல்,
உமிழ்சுடர்க் கலன்கள் நங்கை
உருவினை மறைப்பது ஓரார்;
அமிழ்தினைச் சுவைசெய் தென்ன
அழகினுக்கு அழகு செய்தார்;
இமிழ்திரைப் பரவை ஞாலம்
ஏழைமை உடைத்து மாதோ! 151

---

150. உரைசெய : (வசிட்டன்) சொன்னவுடனே. உவந்த : மகிழ்ந்த. பெண்ணுக்கு அரசி : பெண்களுக்கு அரசியான சீதை. ஆயிழையவர் : அழகிய அணிகளையணிந்த பெண்கள். காதல் கடாவிட : அன்பு தூண்ட. பிரைசம் : தேன். பேதை : சீதை. தாதியரில் : செவிலித்தாயிடம்.

151. அமிழ் இமைத்துணைகள் : (கண்சள்) மறைதற்குக் காரணமான (மேலிமை கீழிமை என்னும்) இரண்டு இமைகளும். அணிஎன : அழகு என. அமைக்குமா போல் : (இயற்கையாக) அமைக்கப் பட்டிருக்குமாப் போல். உமிழ்சுடர்க் கலன்கள் : வீசுகின்ற ஒளியையுடைய ஆபரணங்கள். நங்கை : சீதை. ஓரார் : ஆராயார். சுவை செய்தென்ன : சுவையாக்குவது போல். இமிழ் திரைப்பரவை ஞாலம் : ஒலிக்கின்ற அலைகளையுடைய கடல் சூழ்ந்த உலகம். ஏழைமை : அறியாமை.

### அல்லன் கொல் ? ஆம் கொல் ?

வெள்ளத்தின் சடிலத் தான்தன்
வெஞ்சிலை இறுத்த வீரன்
தள்ளத்தன் ஆவி சோர,
தனிப்பெரும் பெண்மை தன்னை
அள்ளிக்கொண்டு அகன்ற காளை
அல்லன்கொல்? ஆம்கொல்? என்பாள்
உள்ளத்தின் ஊச லாடும்
குழைநிழல் உமிழ இட்டார். 152

### தனக்கு அணி யாது ?

கோன்அணி சங்கம் வந்து
குடியிருந் தனைய கண்டத்து
ஈனம்இல் கலங்கள் தம்மின்
இயைவன அணிதல் செய்தார் ;
மான்அணி நோக்கி னார்தம்
மங்கலக் கருத்துக்கு எல்லாம்
தான்அணி ஆன போது
தனக்குஅணி யாது மாதோ? 153

---

152. வெள்ளத்தின் சடிலத்தான் : கங்கைநீர் வெள்ளத்தைத் தரித்த சடையையுடைய சிவபிரான். வீரன் : இராமன். தள்ள : தடுமாறச் செய்ய. ஆவி : உயிர். சோர : தளர. காளை : விடைபோல்வான். அல்லன்கொல் : அல்லனோ. உள்ளத்தின் : மனம் போல. ஊசல் ஆடும் : அசைகின்ற. குழை : குழை என்னும் காதணி. நிழல் உமிழ : ஒளி வீசும்படி. இட்டார் : அணிவித்தார்.

153. கோன் : திருமால். அணியும் : தரித்துள்ள. சங்கம் : (பாஞ்சசன்னியம் என்னும்) சங்கம். கண்டத்து : கழுத்திலே. ஈனம் இல் : குற்றமற்ற. கலங்கள் : அணிகள். இயைவன : பொருந்துவன. மான் அணி நோக்கினார் : மான் கண்ணையொத்த பார்வையுடைய மகளிர். தான் அணி ஆனபோது : (பிராட்டி) தானே ஒப்பற்ற ஆபரணமாயினபோது.

### வெண் முத்தம் சிவந்த

மொய்கொள்சீ றடியைச் சேர்ந்த
முளரிக்கும் செம்மை ஈந்த
தையலாள் அமிழ்த மேனி
தயங்குஒளி தழுவிக் கொள்ள,
வெய்யபூண் முலையில் சேர்ந்த
வெண்முத்தம் சிவந்த; என்றால்
செய்யவர்ச் சேர்ந்து ளாரும்
செய்யராய்த் திகழ்வர் அன்றே? 154

### கண்கள் அஞ்சன நிறமோ?

நஞ்சினோடு அமுதம் கூட்டி
நாட்டங்கள் ஆன என்ன,
செஞ்செவே நீண்டு, மீண்டு
சேயரி சிதறி, தீய
வஞ்சமும் களவும் இன்றி
மழைஎன மதர்த்த கண்கள்
அஞ்சன நிறமோ? அண்ணல்
வண்ணமோ? அறிதல் தேற்றும். 155

---

154. சீறடி : சிற்றடி. சேர்ந்த : பொருந்திய. முளரி : தாமரை. தையலாள் : சீதாப்பிராட்டி. தயங்கு ஒளி : விளங்குகின்ற ஒளி. வெய்ய : விருப்பத்தைத் தருகின்ற. பூண் : ஆபரணங்கள். செய்யவர் : செம்மைக் குணமுள்ளோர். திகழ்வர் : விளங்குவர். 'அழலாடி அங்கை சிவந்ததோ? அங்கை அழகால் அழல் சிவந்தவாறோ?'' என்பர் காரைக்காலம்மையார்.

155. நஞ்சு : விடம். நாட்டங்கள் : கண்கள். செஞ்செவே : நேராக. சேய்அரி : செவ்வரி. சிதறி : சிந்தி. மழை என மதர்த்த : மழை போல் செழிப்புக்கொண்ட. அஞ்சன நிறம் : மையின் கருநிறம். அண்ணல் வண்ணமோ : இராமனது திருமேனி நிறமோ. தேற்றும் : தெளியகில்லோம்.

## திலகத்தைத் திலகம் செய்தார்

மொய்வளர் குவளை பூத்த
முளரியின் முளைத்த, முன்நாள்
மெய்வளர் மதியின் நாப்பண்
மீன்உண்டேல் அனையது ஏய்ப்ப,
வையக மடந்தை மார்க்கும்,
நாகர்கோ தையர்க்கும், வானத்
தெய்வமங் கையர்க்கும் எல்லாம்
திலகத்தைத் திலகம் செய்தார். 156

## கைவளர் மயில்

நெய்வளர் விளக்கம் ஆட்டி,
நீரொடு பூவும் தூவி,
தெய்வமும் பராவி, வேத
பாரகர்க்கு ஈந்து, செம்பொன்
ஐயவி அறுகு சேர்த்தி,
ஆய்நிற அயினி சுற்றி,
கைவளர் மயில்அ னானை
வலம்செய்து காப்பும் இட்டார். 157

156. மொய்வளர் : வண்டுகள் சூழ்ந்த. முளரியின் : தாமரை மலரினிடத்தே. முன்நாள் மெய் வளர்மதி : (நாள்தோறும் கலைகள் கூடி) உடம்பு வளரும் தன்மையையுடைய பிறைச்சந்திரன். நாப்பண் : நடுவில். மீன் உண்டேல் : நட்சத்திரம் உண்டானால். வையகம் : பூமி. நாகர்கோதையர் : பாதள உலகத்திலுள்ள நாககன்னிகைகள். திலகம் செய்தார் : பொட்டு இட்டார்.

157. நெய்வளர் : நெய்கொண்டு எரிகின்ற. விளக்கம் : விளக்கு. ஆட்டி : சுற்றிக் காட்டி. பராவி : துதித்து. வேத பாரகர்க்கு : மறைகளில் வல்ல அந்தணர்க்கு. ஐயவி அறுகு சேர்த்து : சிறு வெண்கடுகின் தூளை நெற்றியிலே பூசி. ஆய்நிற அயினி சுற்றி : அழகிய செந்நிறம் வாய்ந்த சோறு கலந்த ஆரத்தி நீரைச் சுழற்றி. கைவளர் மயில் அனானை : கைகளினால் ஏந்தி வளர்க்கப்பட்ட மயில் போன்ற சாயலுடைய சீதையை.

## மனம் என்பது ஒன்றே

கஞ்சத்துக் களிக்கும் இன்தேன்
கவர்ந்துணும் வண்டு போல
அஞ்சொற்கள் கிள்ளைக்கு எல்லாம்
அருளினள் அழகை மாந்தித்
தம்சொற்கள் குழறித் தத்தம்
தகைதடு மாறி நின்றார் ;
மஞ்சற்கும் மாத ரார்க்கும்
மனம்என்பது ஒன்றே அன்றோ? 158

## யாவரே ஆற்ற வல்லார் ?

இழைகுலாம் முலையி னாளை
இடைஉவா மதியின் நோக்கி,
மழைகுலாம் ஓதி நல்லார்
களிமயக்கு உற்று நின்றார்;
உழைகுலாம் நயனத் தார்மாட்டு
ஒன்றுஒன்றே விரும்பற்கு ஒத்த
அழகுஎலாம் ஒருங்கே கண்டால்
யாவரே ஆற்ற வல்லார் ? 159

---

158. கஞ்சத்து : தாமரை மலரிலிருந்து. களிக்கும் இன்தேன் : களிப்பை உண்டாக்குதற்குக் காரணமான இனிய தேனை. கவர்ந்து : கொள்ளைகொண்டு. அஞ்சொற்கள் : மழலைச் சொற்கள் : கிள்ளைக்கு : கிளிகளுக்கு. அருளினள் : கற்பித்தவளான சீதை. மாந்தி : பருகி. தகை தடுமாறி : நிலை மாறி. மஞ்சர் : ஆண்கள். பெண்ணாகிய சீதையைக் கண்டு பெண்களும் மயங்குகின்றனராம் !

159. இழை குலாம் முலையினாள் : ஆபரணங்களணிந்த சீதை. இடை உவாமதியின்:(தங்கள்) இடையே தோன்றிய முழுமதி போன்று. மழைகுலாம் ஓதி : மேகத்தை ஒத்த கூந்தல். நல்லார் : மாதர். உழை குலாம் நயனத்தார் மாட்டு : மானின் விழிகளைப் போன்று ஒளிர்கின்ற கண்களையுடைய மங்கையரிடம். ஒன்று ஒன்றே : ஒவ்வோர் உறுப்பே. ஒத்த : தக்கது. ஒருங்கே : ஒன்றுசேர. ஆற்றவல்லார் : பொறுக்க வல்லார்.

## இனிப் புகல்வது என்னே ?

சங்கம்,கை உடைமை யாலும்
தாமரைக் கண்ண தாலும்
எங்குஎங்கும் பரந்து வெவ்வேறு
உள்ளத்தின் எழுதிற் றென்ன
அங்குஅங்கே தோன்ற லாலும்,
அருந்ததி அனைய கற்பின்
நங்கையும் நம்பி ஒத்தாள்;
நாம்இனிப் புகல்வது என்னே? 160

## மணிச்சுடர் தவழ்ந்திட நடந்தாள்

வல்லியை உயிர்த்தநில
மங்கைஇவள் பாதம்
மெல்லிய ; உறைக்கும்என
அஞ்சி, வெளிஎங்கும்
பல்லவ மலர்த்தொகை
பரப்பினள் என,தன்
நல்அணி மணிச்சுடர்
தவழ்ந்திட நடந்தாள். 161

---

160. சங்கம் : சங்கு. தாமரைக் கண்ணது : தாமரையாகிய இடம். அருந்ததி அனையகற்பின் நங்கை : அருந்ததியை ஒத்த கற்பின் நல்லாளாகிய சீதா பிராட்டியார். நம்பி : ஆடவர் திலகனாகிய இராமன். மகளிர் குலத்தில் சீதைக்கு ஒப்பாரின்மையின் உவமை நீங்கிய தோன்றலாகிய இராமனையே உவமையாக்கினர்.

161. வல்லியை : கொடி போன்ற சீதையை. உயிர்த்த : பெற்ற. மங்கை : சீதை. உறைக்கும் : வருந்தும். அஞ்சி : பயந்து. பல்லவ மலர்த்தொகை : தளிரையும் மலர்த்தொகுதியையும். நல் அணி மணிச்சுடர் : நல்ல இரத்தின நகைகளின் ஒளி. தவழ்ந்திட : பரவிட.

### மஞ்ஞை என வந்தாள்

தொழும்தகைய மென்நடை
தொலைந்து, களிஅன்னம்
எழுந்து,இடை விழுந்துஅயர்வது
என்னஅயல் எங்கும்
கொழுந்துடைய சாமரை
குலாவஓர் கலாபம்
வழங்குநிழல் மின்னவரும்
மஞ்ஞைஎன வந்தாள். 162

### விதான நிழல் வந்தாள்

மண்முதல் அனைத்துஉலகின்
மங்கையருள் எல்லாம்,
கண்மணி எனத்தகைய
கன்னிஎழில் காண,
அண்ணல்மர பின்சுடர்,
அருத்தியொடு தான்அவ்
விண்இழிவது ஒப்பதுஓர்
விதானநிழல் வந்தாள். 163

162. தொழும்தகைய : வணங்கத்தக்க. தொலைந்து : தோற்று. இடை விழுந்து : இடை இடையே விழுந்து. என்ன : போன்று. அயல் எங்கும் : இரு பக்கங்களிலும். கொழுந்துடைய சாமரை: இள ஒளியையுடைய வெண்சாமரம். குலாவ : விளங்க. ஓர் : ஒப்பற்ற. கலாபம் : தோகை. வழங்கு நிழல் மின்ன : ஒளியைக் கொடுக்க விளக்கமுண்டாக. மஞ்ஞை : மயில்.

163. உலகின் : உலகிலுள்ள. கண்மணி : கண்ணின் மணி. தகைய: தக்க. எழில் : அழகு. அண்ணல் மரபின் சுடர் : இராமனது குல முதல்வனை சூரியன். அருத்தியொடு : விருப்பத்தோடு. விண் : வானம். இழிவது : இறங்குவது. விதானநிழல் : மேற்கட்டியின் நிழல்.

### சீறடி பெயர்த்தாள்

கற்றைவிரி பொற்சுடர்
பயிற்றுறு கலாபம்,
சுற்றும்மணி புக்கஇழை
மிக்குஇடை துவன்றி
வில்தவழ, வாள்நிமிர,
மெய்அணிகள் மின்ன,
சிற்றிடை நுடங்கஒளிர்
சீறடி பெயர்த்தாள். 164

### மண்டபம் அடைந்தாள்

பொன்னின்ஒளி, பூவின்வெறி,
சாந்துபொதி சீதம்,
மின்னின்எழில் அன்னவள்தன்
மேனியது மான,
அன்னமும், அரம்பையரும்
ஆர்அமிழ்தும் நாண,
மன்அவை இருந்தமணி
மண்டபம் அடைந்தாள். 165

---

164. கற்றை விரி : தொகுதியாக விரிந்த. பொற்சுடர் : பொன்னொளி. பயிற்றுறு : அடர்ந்திருக்கப் பெற்ற. கலாபம் : கோவை மணி. சுற்றும் : சுற்றிலும். மணிபுக்க இழை : இரத்தினங்கள் பதிக்கப்பட்டுள்ள ஆபரணங்கள். மிக்கு : மிகுந்து. துவன்றி : (நடுவிலே) நெருங்கி. வில் தவழ : ஒளி வீச. வாள் : ஒளி. நிமிர : மேலோங்க. மெய் : உடம்பு. நுடங்க : துவள. ஒளிர் சீறடி : விளங்குகின்ற சிற்றடிகள். பெயர்த்தாள் : (எடுத்து வைத்து) நடந்தாள்.

165. பூவின் வெறி : பூவின் நறுமணம். சாந்து பொதி சீதம் : சந்தனத்தில் பொருந்தியுள்ள குளிர்ச்சி. மின்னின் எழில் : மின்னலின் பளபளப்பு. மேனி : தேகம். மான : ஒத்து விளங்க. அரம்பையர் : தேவ மகளிர். ஆர் : அருமையான. மன் அவை : அரசக்கூட்டம். மணி : அழகிய, அல்லது இரத்தினம் இழைத்த.

## கன்னி கண்ட கடல்வண்ணன்

அன்னவளை, 'அல்லள்' என,
'ஆம்' என அயிர்ப்பான்;
கன்னிஅமிழ் தத்தைஎதிர்
கண்டகடல் வண்ணன்,
உன்உயிர் நிலைப்பதுஓர்
அருத்தியொடு உழைத்து,ஆண்டு
இன்அமிழ்து எழ,களிகொள்
இந்திரனை ஒத்தான். 166

## வசிட்டன் மகிழ்வுற்றான்

எங்கள்செய் தவத்தினில்,
இராமன்என வந்தோன்
சங்கிநெடு சக்கரம்
உடைத்தனி முதற்பேர்
அம்கண்அரசு ஆதலின்,அவ்
அல்லிமலர் புல்லும்
மங்கைஇவள் ஆம்என,
வசிட்டன்மகிழ் வுற்றான். 167

---

166. அன்னவளை : அச்சீதையை. அல்லள் என ஆம் என : தான் முன்கண்ட பெண்தானா அல்லளா என்று. அயிர்ப்பான் : ஐயப்பட்டான். கன்னி அமிழ்து : (சீதையென்னும்) அமுதை யொத்த கன்னியை. கடல் வண்ணன் : கடல் நிறத்தவனான இராமன். உன்னுயிர் : இழுபட்டுக்கொண்டிருக்கிற உயிர். அருத்தி : விருப்பம். களிகொள் : பெருமகிழ்வு எய்தும்.

167. தவத்தினின் : தவத்தின் பயனாக. சங்கிநெடு சக்கரம் உடை : சங்கம், சக்கரம் என்னும் திருப்படைகளையுடைய. தனிமுதல்: ஒப்பற்ற முழுமுதற் கடவுள். அம்கண் அரசு : அழகிய திருக் கண்களையுடைய தலைவனான திருமால். அல்லி மலர் புல்லும் : செந்தாமரை மலரைத் தங்குமிடமாகக் கொண்டு அதிற் பொருந்தும். மங்கை : இலக்குமி. திருமால் முனிவர்களின் தவத்தின் பயனாக இராமனாகப் பிறந்தான். அவனை மணக்கும் இவள் இலக்குமியே என்று வசிட்டர் மகிழ்கிறார்.

## இன்றுதிரு எய்தியது

துன்றுபுரி கோதைஎழில்
கண்டு,உலகு சூழ்வந்து,
ஒன்றுபுரி கோலொடு
தனித்திகிரி உய்ப்பான்
'என்றும்உலகு ஏழும்அரசு
எய்திஉள னேனும்,
இன்றுதிரு எய்தியது
எனக்குஎன இருந்தான், 168

## உடல் சிந்தைவயம் அன்றோ

நைவளம் நவிற்றுமொழி
நண்ணவர லோடும்,
வையம்நுகர் கொற்றவனும்
மாதவரும், அல்லார்
கைகள்தலை புக்கன;
கருத்துளவை எல்லாம்
தெய்வம்என உற்ற;உடல்
சிந்தைவயம் அன்றோ? 169

---

168. துன்றுபுரி கோதை : அடர்ந்த முறுக்கிய கூந்தலையுடைய சீதை. சூழ்வந்து : சுற்றி வந்து. ஒன்றுபுரி கோலொடு தனித் திகிரி உய்ப்பான் : ஒரே தன்மைத்தான ஆட்சியுடன் ஒப்பற்ற ஆணை செலுத்துபவனான தயரதன். ஏழுலகையும் ஏற்கனவே தான் ஆண்டிருந்தும் சீதை தன் மருமகளாக வந்தபோதுதான் மெய்த்திருப் பெற்றதாகப் பூரிக்கிறான் தயரதன்.

169. நைவளம் : நைவளம் என்னும் குறிஞ்சியாழ்ப்பண். நவிற்று மொழி : பேசுகின்ற இன்சொற்களையுடைய சீதை. நண்ண : அருகில் வர. வையம் நுகர் கொற்றவன் : உலகனைத்தையும் உண்ட வெற்றி வீரனாகிய இராமன். மாதவர் : விசுவாமித்திரர் போன்றோர். தலைபுக்கன : (கைகள் தாமே) தலைகள் மீது குவிந்தன. கருத்துளவை எல்லாம் : மனம் முதலான உட்கருவிகளெல்லாம். உற்ற : நினைந்தன. (உள்ளத்தின் வழியே உடலின் இயக்கம் அமையும் என்பது கருத்து.)

## பொன்மனை புகுந்தாள்

மாதவரை முற்கொள
 வணங்கி, நெடுமன்னன்
பாதமல ரைத்தொழுது,
 கண்கள் பனிசோரும்
தாதைஅருகு இட்டதவி-
 சில்தனி இருந்தாள்,
போதினை வெறுத்து,அரசர்
 பொன்மனை புகுந்தாள். 170

## மலை ஏழையும் இறானோ

அச்சுஎன நினைத்தமுதல்
 அந்தணன் நினைந்தான்;
பச்சைமலை ஒத்தபடி
 வத்துஅடல் இராமன்,
நச்சுடை வடிக்கண்மலர்
 நங்கைஇவள் என்றால்
இச்சிலை கிடக்க;மலை
 ஏழையும் இறானோ? 171

---

170. முற்கொள : முதலாவதாக. நெடுமன்னன் : சிறந்த அரசனாகிய தயரதன். பனிசோரும் : (ஆனந்த) கண்ணீர் சொரிகின்ற. தாதை : சனகன். தவிசு : ஆசனம். போதினை வெறுத்து அரசர் பொன்மனை புகுந்தாள் : செந்தாமரை மலரை விட்டு நீங்கி, அரசரின் அழகிய மாளிகையிலே வந்து சேர்ந்த (திருமகளான) சீதை.

171. அச்சு என நினைத்த முதல் அந்தணன் : உலகோர் மாதிரிப்படி என்று கருதும் சிறப்பையுடைய விசுவாமித்திர முனி. பச்சை மலை ஒத்த படிவத்து அடல் இராமன் : பச்சை மாமலை போல் மேனியனும், வீரனுமான இராமன். நச்சுடை வடிக்கண் மலர் நங்கை : நஞ்சு பொதிந்த கூர்மையான கண்களையுடைய மலரின் வீற்றிருக்கும் திருமகள் அவதாரமான சீதை. இச்சிலை கிடக்க : இந்த வில் கிடக்கிறது. (அற்பம்) இறானோ : முறிக்க மாட்டானோ.

### கடைக்கணின் உணர்ந்தாள்

எய்வளைவில் ஏற்றதும்
இறுத்ததும் உரைத்தும்
மெய்விளைவு இடத்து,முதல்
ஐயம்விட லுற்ருள்,
ஐயனை அகத்துவடி-
வேஅல, புறத்தும்
கைவளை திருத்துபு
கடைக்கணின் உணர்ந்தாள். 172

### உடல் தடித்தாள்

கருங்கடை நெடுங்கண்ஒளி
ஆறுநிறை கண்ணப்
பெருங்கடலின் மண்ட,உயிர்
பெற்றுஇனிது உயிர்க்கும்
அருங்கலன் அணங்குஅரசி,
ஆர்அமிழ்து அனைத்தும்
ஒருங்குடன் அருந்தினரை
ஒத்து,உடல் தடித்தாள். 173

---

172. எய் வளைவில் : எய்வதற்காக வளைந்த சிவ தனுசு. மெய் விளைவு இடத்து : உண்மை வெளிப்பட்டபோது. முதல் ஐயம் : முன் தான் கொண்டிருந்த சந்தேகம். ஐயனை : இராமனை. கைவளை திருத்துபு கடைக்கணின் உணர்ந்தாள் : கைவளையைத் திருத்தும் பாவனையில் (இராமனை) கடைக் கண்ணுற் கண்டு கொண்டாள். சீதை இராமனைப் பார்க்க வேண்டி, தன் கை வளையல்களைத் தொட்டுச் சரிப்படுத்துவதாக ஒரு போக்குக் காட்டினுள். எல்லோருடைய கண்களும் அவளது வளையல் களை நோக்கின. அப்போது கடைக்கண்ணுல் இராமனை நோக்கித் தன் ஐயம் தெளிந்தாள்.

173. கருங்கடை நெடுங்கண் : கருமையான காதளவு நீண்ட கண். ஒளி ஆறு : ஒளியாகிய ஆறு. நிறைகண்ணப் பெருங்கடலின் : நிரம்பிய (யாவருக்கும் கண்ணனுன) இராமனுகிய ஆழ்ந்தகன்ற கடலில். மண்ட : மிக்குச் சென்று. உயிர்க்கும் : உயிர். நிலைக்கப் பெற்று. அருங்கலன் அணங்கு அரசி : உயர்ந்த அணிகலம் புனைந்த பெண்ணரசியான சீதை. ஆர் அமிழ்து : நிறைந்த அமுதம். ஒருங்குடன் : ஒரேயடியாக. தடித்தாள் : பூரித்துப் போனுள்.

## துயர் மறந்தாள்

கணங்குழை, "கருத்தின்உறை
கள்வன்எனல் ஆனன்,
வணங்குவில் இறுத்தவன்"
எனத்துயர் மறந்தாள்;
அணங்குறும் அவிச்சைகெட,
விச்சையின் அகம்பாடு
உணர்ந்துஅறிவு முற்றுபயன்
உற்றவரை ஒத்தாள், 174

## உற்ற பகல் நாளை

வாளைஉக ள,கயல்கள்
வாவிபடி மேதி
மூளை,முது கைக்கதுவ
மூரிய வரால்மீன்
பாளைவிரி யக்குதிகொள்
பண்ணைவள நாடா!
நாளைஎன உற்றபகல்
நல்தவன் உரைத்தான். 175

174. கணங்குழை : திரண்ட குழையினையுடைய சீதை. கருத்தின் உறை கள்வன் : தனது நினைவில் தங்கிய கள்வன் (இராமன்). வணங்கு : வளைந்த. அணங்குறும் அவிச்சை கெட : (பிறவி) துயர் உறுதற்குக் காரணமான அஞ்ஞானம் நீங்க. விச்சையின் அகம்பாடு உணர்ந்து : தத்துவ உணர்வால் உள்ளத்தின் கண். அறிவு முற்று பயன் : அறிவு முதிர்ந்ததனால் ஆகிய பயனை முத்தி உலகில் நிலை பெறல்.

175. வாளை : வாளைமீன்கள். உகள : துள்ளிக் குதிக்க. கயல்கள் : கயல் மீன்கள் ; வாவிபடி மேதி : குளங்களில் படிந்த எருமைகளின். மூளை முதுகைக் கதுவ : (மூளையுள்ள இடமான) தலையையும், முதுகையும் பற்ற. மூரிய : வன்மை வாய்ந்த. பண்ணை வளநாடா : மருத நிலவளம் வாய்ந்த கோசல நாட்டு மன்னவனை தயரதனே. நாளை என : (திருமணத்திற்கு) நாளை என்று. நல்தவன் : கோசிகன்.

### மாடவரை புக்கனன்

அன்னம்அரி தின்பிரிய
    அண்ணலும் அகன்றுஓர்
பொன்னின்நெடு மாடவரை
    புக்கனன்; மணிப்பூண்
மன்னவர் பிரிந்தனர்கள்;
    மாதவர்கள் போனார்;
மின்னுசுடர் ஆதவனும்,
    மேருவில் மறைந்தான். 176

### அணிமுரசு அறைக

மானவர் பெருமானும்,
    மணநினை வினன்ஆக,
'தேன்அமர் குழலாள்தன்
    திருமண வினை,நாளை ;
பூநகு மணிவாசம்,
    புனைநகர் அணிவீர் !'' என்று
ஆனையின் மிசை,யானை
    அணிமுரசு அறைகஎன்றான். 177

---

176. அன்னம் : (நடையால் அன்னம் ஒத்த) சீதாதேவி. அரிதாக : (பிரிய மனமின்றி) அரிதில். அண்ணலும் : இராமனும். பொன்னின் நெடு மாடவரை : பொன்னாலான உயர்ந்த மலை போன்ற மாளிகை. மணிப்பூண் மன்னவர் : நவமணிகளால் செய்யப் பட்ட அணிகலன்கள் புனைந்த அரசர். மின்னு சுடர் ஆதவன் : ஒளிவிடும் கதிர்களையுடைய சூரியன்.

177. மானவர் பெருமான் : மன்னவருள் பெருமை பொருந்திய சனகன். மண நினைவினன் : திருமணம் நடத்த வேண்டிய நினைப்புள்ள வனாக. தேனமர் குழலாள் : வண்டுகள் மகிழும் மலர்க்கூந்தலை யுடைய சீதை. பூ நகு மணி : மலர்களினாலும், ஒளிவிடும் மணி களாலும். புனைநகர் அணிவீர் : அழகிய நகரை அழகு செய்வீர். மிசை : மேல். அணி முரசு : மணமுரசு.

## இரவுஒரு கரைகண்டார்

முரசுஅறை தலும்,மான
முதியரும் இளையோரும்
விரைசெறி குழலாரும்
விரவினர் விரைகின்றார் ;
உரைசெறி கிளையோடும்
உவகையின் உயர்கின்றார் ;
கரைதெரிவு அரிதுஆகும்
இரவுஒரு கரைகண்டார். 178

## வந்து நிறைந்தனர்

தேர்மிசை வருவாரும்,
சிவிகையில் வருவாரும்,
ஊர்தியில் வருவாரும்,
ஒளிமணி நிரைஓடைக்
கார்மிசை வருவாரும்,
கரிணியில் வருவாரும்,
பார்மிசை வருவாரும்,
பண்டியில் வருவாரும். 179

178. அறைதலும் : அறைவித்ததும். மான : பெருமை சான்ற. விரை செறி குழலார் : மணம் நாறும் கூந்தலையுடைய மகளிர்: விரவினர் : ஒன்று கூடினர். உரைசெறி கிளையோடும் : உரையாடும் நிறைந்த சுற்றத்தாரோடு. கரை தெரிவரிதாகும் இரவு : கரை காணமுடியாத கடல் போன்ற இருட்டின்.

179. தேரேறி வருபவரும், பல்லக்கில் வருபவரும், ஒளிமிக்க இரத்தினங்கள் இழைத்த முகபடாம் அணிந்த மேகம் போன்ற யானை மேல் வருபவரும், பிடியானை மேல் வருபவரும், நடந்து வருபவரும், வண்டிகளில் வருபவரும். சீதை திருமணம் காண மிதிலை வந்தோர் எங்ஙனம் வந்தனர் என்பதை நன்கு சித்திரிக்கிறது இப்பாடல். சிவிகை : பல்லக்கு. ஊர்தி : வாசனம். கார் : மேகம் போன்ற யானை. கரிணி : பெண் யானை. பண்டி : வண்டி.

**பொன்மலை ஒத்தது**

மன்னரும் முனிவரும்
மற்று ளோர்களும்
அன்னமென் நடைஅணங்கு
அனைய மாதரும்
துன்னினர் துவன்றலின்
சுடர்கள் சூழ்வரும்
பொன்மலை ஒத்தது,அப்
பொருஇல் கூடமே. 180

**மங்கல மஞ்சனம் ஆடினன்**

சங்குஇனம் தவழ்கடல்
ஏழில் தந்தவும்,
சிங்கஇல் அருமறை
தெரிந்த தீர்த்தங்கள்
கங்கையே முதலவும்
கலந்த நீரினால்
மங்கல மஞ்சனம்
மரபின் ஆடியே. 181

---

180. அன்னமென் நடை அணங்கு : அன்னநடையினரான தேவமாதர். துன்னினர் : நெருங்கி வந்தனர். துவன்றலின் : வலஞ் செய்தலில். சுடர்கள் : நட்சத்திரங்கள். பொன்மலை : மேருமலை. பொருஇல் கூடமே : ஈடிலா மணமண்டபம்.

181. சங்கு இனம் தவழ் கடல் : சங்கின் கூட்டம் ஊர்ந்து செல்லும் கடல். தந்தவும் : கொண்டு வரப் பெற்றவும். சிங்க இல் : குற்றமற்ற. முதலவும் : முதலிய. மங்கல மஞ்சனம் மரபின் ஆடியே : மங்களகரமான திருமஞ்சனத்தை முறைப்படி ஆடி.

### ஆதிஅம்சோதியை வணங்கினான்

கோதுஅறு தவத்துத்தம்
குலத்து ளோர்தொழும்
ஆதிஅம் சோதியை
அடிவ ணங்கினான் ;
காதுஇயல் கயல்விழிக்
கன்னி மார்களை
வேதியர்க்கு அருமறை
விதியின் நல்கியே. 182

### சுடர்க்குலம் சூடினான்

கார்விடக் கறையுடைக்
கணிச்சி வானவன்
வார்சடைப் புடையின்ஓர்
மதிமி லைச்சநாள்,
சூர்சுடக் குலம்எலாம்
சூடி னான்என
வீரபட் டத்தொடு
திலகம் மின்னவே. 183

---

182. கோது அறு : குற்றமற்ற. தவத்து : தவமுடைய. ஆதி அம் சோதியை : பழமையான பரஞ்சோதியை. காது இயல் கயல் விழிக் கன்னிமார்களை : காதளவு செல்லும் கயல்மீன் போன்ற கண்களையுடைய கன்னிப் பெண்களை. விதியின் : முறைப்படி.

183. கார்விடக்கறையுடை : கரிய விடத்தைக் கழுத்தில் களங்கமாக வுடைய. கணிச்சி வானவன் : மழுவாளியான சிவபெருமான். வார்சடைப்புடையின் ஓர் : நீண்ட சடை முடியின் ஒரு பக்கம். மதிமிலைச்ச : பிறைச்சந்திரனைச் சூடி விளங்க. சூர் சுடர்க் குலம் : தெய்வத் தன்மையுள்ள ஒளிக்கூட்டங்கள். மின்ன : ஒளிபெற்றுத் திகழ.

## மூவரும்தானென ஒத்ததே

மேவரும் சுடர்ஒளி
விளங்கும் மார்பின்நூல்
ஏவரும் தெரிந்துஇனிது
உணர்மின் ஈண்டுஎன
தேவரும் முனிவரும்
தெரிக்க லாமுதல்
மூவரும் தான்என
முடித்தது ஒத்ததே. 184

## பணிப்பரும் தாமரைப் பாதம்

இனிப்பரந்து உலகினை
அளப்பது எங்கு?என
தனித்தனி தடுப்பன
போலும் சால்பின ;
நுனிப்பரும் நுண்வினைச்
சிலம்பு நோன்கழல்
பனிப்பரும் தாமரைப்
பாதம் பற்றவே. 185

184 மேவரும் : அணுகுதற்கரிய. சுடர்ஒளி விளங்கும் மார்பு : முச்சுடர் போல் விளக்கமுறும் திருமார்பில். நூல் : பூணூல். ஏவரும் : யாவரும். தெரிக்கலா : அறிந்து கூறமுடியாத. முதல் மூவரும்தான் : மும்மூர்த்திகளும்தானே. முடித்தது : முடியப் பட்டது. மூன்று வடங்களையுடைய பூணூலின் முடிச்சு மும்மூர்த்திகளும் இராமனே என்பது போல் விளங்கிற்றும். இராமன் மும்மூர்த்திகளின் அவதாரம் எனக் கம்பர் வலியுறுத் துவார்.

185. பரந்து : வளர்ந்து பரவி. தனித்தனி தடுப்பன போலும் : ஒவ்வொன்றும் தனியே தடை செய்தல் போன்ற சால்பின : தகுதியுடையன. நுனிப்பரும் : ஆய்ந்தறிய முடியாத. வினை : செய்தொழில்கள். பனிப்பு அரும் : வாட்டமற்ற. பற்ற: பொருந்த.

## தவத்திஞல் அனந்தல் நீங்கிஞன்

இன்னணம் ஒளிர்தர
　　இமைய வர்க்குளலாம்
தன்னையே அனையதுஓர்
　　கோலம் தாங்கிஞன்;
பன்னக மணிவிளக்கு
　　அழலும் பாயலுள்
அன்னவர் தவத்திஞல்
　　அனந்தல் நீங்கிஞன். 186

## முப்பர முதல்

முப்பரம் பொருளிற்குள்
　　முதலை, மூலத்தை
இப்பரம் துடைத்தவர்
　　எய்தும் இன்பத்தை,
அப்பனை அப்பினுள்
　　அமிழ்தை, தன்னையே
ஒப்பனை, ஒப்பனை
　　உரைக்க ஒண்ணுமோ ? 187

---

186. இன்னணம் : இவ்வாறு. கோலம் : அலங்கார உருவை. பன்னக மணி விளக்கு : நாகரத்தினங்களான ஒளி விளக்குகள். அழலும் : ஒளிவிளங்கும். பாயலுள் : (ஆதிசேடஞகிய) படுக்கையில். அன்னவர் : தேவர். அனந்தல் : அறிதுயில்.

187. முப்பரம் பொருள் : அரி, அயன், அரன் என்ற மும்மூர்த்திகளான பரம்பொருள். முதலை : (மூவர்க்கும்) முதல்வஞய் நிற்பவனை. இப்பரம் : இவ்வுலகத்தொடர்பு. துடைப்பவர் : துறந்த ஞானியர். அப்பினுள் : பாற்கடலில். ஒப்பனை : 1. ஒப்பவனை; 2. அலங்காரத்தை.

## கவரி கால் இயக்க ஏகினன்

அனையதுஓர் தேரினில்
அருணன் நின்றெனப்
பனிவரு மலர்க்கண்நீர்
பரதன் கோல்கொள,
குனிசிலைத் தம்பியர்
இருவ ரும்குழைந்து
இனியபொற் கவரிகால்
இயக்க ஏகினன். 188

## அழகினைப் பருகினர் கொலோ

சொரிந்தனர் மலர்மழை;
சுண்ணம் தூவினர் ;
விரிந்துஒளிர் காசு,பொன்
தூசு வீசினர்;
பரிந்தனர் ; அழகினைப்
பருகி னர்கொலோ?
தெரிந்திலம், திருநகர்
மகளிர் செய்கையே ! 189

---

188. அருணன் நின்றென : அருணன் நின்றாற்போல. பனிவரு மலர்க்கண்நீர்ப் பரதன் : தாமரை மலர் போன்ற கண்களினின்று ஆனந்த நீர்த்துளி ஒழுகும் பரதன். கோல் கொள : குதிரையோட்டும் கோலைப் பிடிக்கவும். குனிசிலைத் தம்பியர் : வளைந்த வில்லைத் தாங்கிய இலக்குவசத்துருக்கனர். கவரி : சாமரை.

189. அம்மிதிலா புரத்து மகளிர் (யாவரும்) பூமழை பொழிந்தனர். ஒளி பரவி விளங்கும் மணிகளையும் பொற்காசுகளையும் ஆடைகளையும் வாரி வழங்கினர். விருப்பமுடன் பெருமானது அழகாகிய அமுதினை உட்கொண்டனர் போலும் ! அம்மகிழ்ச்சி மிகுதியால் தாம் செய்யும் செய்கைகளை அறியாதவராகவே ஆயினர்.

### தேரிடைச் சென்று சேர்ந்தான்

எஞ்சல்இல் உலகத்து உள்ள
 எறிபடை அரச வெள்ளம்
குஞ்சரக் குழாத்தின் சுற்ற,
 கொற்றவன் இருந்த கூடம்
வெஞ்சினத் தனுவ லானும்
 மேருமால் வரையில் சேரும்
செஞ்சுடர்க் கடவுள் என்ன,
 தேரிடைச் சென்று சேர்ந்தான். 190

### தாதை பாதம் வணங்கினுன்

இரதம்ஆண்டு இழிந்த பின்னர்,
 இருமருங்கு இரண்டு கையும்,
பரதனும் இளைய கோவும்
 பரிந்தனர் ஏந்த, பைந்தார்
வரதனும் எய்தி, மைதீர்
 மாதவர்த் தொழுது, நீதி
விரதமெய்த் தாதை பாதம்
 வணங்கிமாடு இருந்த வேலை. 191

---

190. எஞ்சலில் : குறைவில்லாத. எறிபடை அரச வெள்ளம் : வேல் முதலிய எறியும் படைகளையுடைய அரசர் கூட்டம். குஞ்சரக் குழாத்தின் : யானைக்கூட்டம் போல. கொற்றவன் : தயரதன். கூடம் : திருமண மண்டபம். வெஞ்சினத்தனுவலான் : கொடுஞ்சினம் காட்டவல்ல கோதண்டபாணியான இராமன். செஞ்சுடர்க்கடவுள் : செங்கிரணங்களையுடைய சூரியன்.

191. ஆண்டு : அங்கு. இழிந்த : இறங்கிய. இருமருங்கு : இரு பக்கங்களிலும். இளையகோ : இலக்குவன். பரிந்தனர் தாங்க : அன்புகொண்டு தாங்கிவர. பைந்தார் வரதன் : பசுமையான மாலையணிந்த இராமன். மைதீர் : குற்றமற்ற. நீதிவிரத மெய்த் தாதை : நீதியையே விரதமாகக்கொண்ட உண்மையாளனை தந்தை (தயரதன்). மாடு : அருகில்.

## மண்டபம் அதனில் வந்தாள்

சிலையொடு கயல்,வாள் திங்கள்
ஏந்தி,ஓர் செம்பொன் கொம்பர்
முலையிடை முகிழ்ப்ப, தேரின்
மீமிசை முளைத்தது அன்னாள்,
அலைகடல் பிறந்து, பின்னை
அவனியில் தோன்றி, மீள
மலையிடை உதிக்கின் றுள்போல்,
மண்டபம் அதனில் வந்தாள். 192

## அழகு காணப் புகுந்தனர்

இந்திரன் சசியொடும்
எய்தி னன்;இளஞ்
சந்திர மௌலியும்
தைய லாளொடும்
வந்தனன்; மலர்அயன்
வாக்கி னளுடன்
அந்தரம் புகுந்தனன்
அழகு காணவே. 193

---

192. வில்லையும் கெண்டை மீன்களையும் ஒளி பொருந்திய சந்திரனை யும் தாங்கிக்கொண்டு, தனமாகிய தாமரை மொட்டு நடுவிலே தோன்ற, பொன் கொம்பு ஒன்று தேரின் மேல், கீழ்த்திசையில் முளைத்தெழுவதைப் போலச் சீதையானவள் வந்தாள். எங்கே? திருப்பாற்கடலிலே பிறந்து பின்பு நிலவுலகில் தோன்றி, இப்போது மலையிலே உதயம் செய்கிறவளைப் போல மண்டபத் தினுள்ளே வந்தாள்.

193. சசி : இந்திராணி. இளம் சந்திர மௌலி : பிறை சூடியான சிவபிரான். தையலாள் : உமாதேவி. அயன் : பிரமன். வாக்கி னள் : கலைமகள். அந்தரம் : விண். இந்திரன், சிவன், பிரமன் ஆகியோர் தம்பதிகளாகச் சீதையின் திருமணம் காண வானிடை வந்தனர்.

## போகமும் யோகமும் ஒத்தார்

மன்றலின் வந்து
மணித்தவிசு ஏறி,
வென்றி நெடுந்தகை
வீரனும், ஆர்வத்து
இன்துணை அன்னமும்
எய்தி இருந்தார்;
ஒன்றிய போகமும்
யோகமும் ஒத்தார். 194

## தடக்கையின் ஈந்தான்

கோமகன் முன்,சன
கன்,குளிர் நன்னீர்
பூமக ளும்பொரு-
ளும்,என நீஎன்
மாமகள் தன்னொடும்
மன்னுதி என்று
தாமரை அன்ன
தடக்கையின் ஈந்தான். 195

---

194. மன்றலின் வந்து : அலங்காரப் பந்தர்க்கு வந்து. தவிசு : ஆதனம். வென்றி நெடுந்தகை வீரன் : வெற்றித் திறமும் உத்தம குணங்களும் உடைய வீரனான இராமன். ஆர்வத்து இன்துணை அன்னம் : அன்புமிக்க இனிய துணைவியான அன்னம் போன்ற சீதாதேவி. ஒன்றிய போகமும் யோகமும் ஒத்தார் : ஒன்று சேர்தற்குரிய போகத்தையும் அதற்குத் துணையாகும் யோகத்தையும் ஒத்தவரானார்கள்.

195. சக்கரவர்த்தி திருமகனை இராமபிரான் முன் நின்றுகொண்டு சனகராசன், 'ஸ்ரீதேவியும் பரம்பொருளும் போல, நீ என் திருமகளான சீதாதேவியுடன் நிலைபெற்று வாழ்வாயாக!' என்று கூறிய வண்ணம், பெருமானது தாமரை போலும் நீண்ட கையில், குளிர்ந்த புனித நீரை வார்த்து அளித்தான்.

### சங்கம் முழங்கின

அந்தணர் ஆசி,
அருங்கல மின்னார்
தந்தபல் லாண்டுஇசை,
தார்முடி மன்னர்
வந்தனை, மாதவர்
வாழ்த்துஒலி யோடு
முந்திய சங்கம்
முழங்கின மாதோ ! 196

### வானின் விளங்கியது பார்

வானவர் பூமழை,
மன்னவர் பொன்பூ,
ஏனையர் தூவும்
இலங்கொளி முத்தம்,
தான்நகு நாள்மலர்,
என்றுஇவை தம்மால்,
மீன்நகு வானின்
விளங்கியது இப்பார். 197

---

196. அருங்கல மின்னார் : நாயகமணி போன்ற நங்கையர். தார் முடி மன்னர் : மாலை சூடிய முடிவேந்தர். வந்தனை : வழிபாட்டுரை. முந்திய சங்கம் முழங்கின : முற்பட்ட சங்கங்களின் ஒலிகளும் ஆரவாரித்தன.

197. பூமழை : (கற்பக) மலர்மாரி. இலங்கொளி முத்தம் : ஒளி விளங்கும் முத்துக்கள். தான் நகு நாள் மலர் : தாமாக மலர்ந்த பூக்கள். மீன் நகு வானின் : நட்சத்திரங்கள் ஒளிரும் ஆகாயத்தைப் போல். இப்பார் : இந்நில உலகம்.

## தடக்கை பிடித்தான்

வெய்ய கனல்தலை
 வீரனும், அந்நாள்
மைஅறு மந்திரம்
 மும்மை வழங்கா,
நெய்அமை ஆவுதி
 யாவையும் நேர்ந்தே
தையல் தளிர்க்கை
 தடக்கை பிடித்தான், 198

## உடம்பு தொடர் உயிர்

இடம்படு தோளவ
 னோடுஇயை வேள்வி
தொடங்கிய வெங்கனல்
 சூழ்வரு போதின்
மடம்படு சிந்தையள்
 மாறு பிறப்பின்
உடம்புஉயி ரைத்தொடர்-
 கின்றதை ஒத்தாள். 199

---

198. வெய்ய கனல்தலை : வெம்மையுள்ள அக்கினியிலே. மைஅறு : குறைவற்ற. வீரனை இராமன் மந்திர முறைப்படி ஆவுதியில் நெய் பெய்து சீதையின் தளிர் போன்ற மெல்லிய கையை, தன் பெரிய திருக்கரத்தால் பிடித்தான்.

199. இடம்படு தோளவன் : பரந்த தோள்களையுடைய இராமன். இயை : கூடி. வேள்வி : மணச்சடங்கு. வெங்கனல்சூழ் வரு போதில் : விரும்பத்தகும் அந்த அக்கினியை வலம் வருங்கால். மடம்படு சிந்தையள் : (பெண்மைக்குரிய) மடமைக் குணம் கொண்ட மனத்தினளான சீதை. மாறுபிறப்பின் : வேறுபட எடுக்கும் பிறவிக்கேற்ற.

## அருந்ததி கண்டார்

வலம்கொடு தீயை
வணங்கினர், வந்து
பொலம்பொரி செய்வன
செய்பொருள் முற்றி,
இலங்குஒளி அம்மி
மிதித்து, எதிர்நின்ற
கலங்கல்இல் கற்பின்
அருந்ததி கண்டார். 200

## நல்மனை புக்கான்

மற்றுஉள செய்வன
செய்து மகிழ்ந்தார்;
முற்றிய மாதவர்
தாள்முறை சூடி,
கொற்றவ னைக்கழல்
கும்பிட லோடும்
பொற்றொடி யைக்கொடு
பொன்மனை புக்கான். 201

---

200. வலம் கொடு : வலம் வந்து. பொலம் பொரி செய்வன செய்பொருள் முற்றி : அழகமைந்த காப்புநாண் கட்டிக்கொண்டு செய்யத்தகும் சடங்குகளை முடித்துக்கொண்டு. இலங்கு ஒளி : ஒளி விளங்கும். கலங்கலில் கற்பின் அருந்ததி : கலக்கமற்ற கற்புள்ள அருந்ததி.

201. மற்றுஉளசெய்வன : மேலும் செயத்தக்க சடங்குகளை. முற்றிய: முதிர்ந்த. முறை : முறைப்படியாக. கொற்றவனை : தயரதனை. குப்பிடலோடும் : வணங்கியவுடனே. பொற்றொடி : பொன் வளையல்களைக் கையிலணிந்த சீதை. பொன்மனை : அழகிய மாளிகை.

## மங்கல ஆரவாரம்

ஆர்த்தன பேரிகள்;
ஆர்த்தன சங்கம்;
ஆர்த்தன நான்மறை;
ஆர்த்தனர் வானோர்;
ஆர்த்தன பல்கலை;
ஆர்த்தன பல்லாண்டு;
ஆர்த்தன வண்டுஇனம்;
ஆர்த்தன வேலை. 202

## அன்னை மூவர் அடி சூடினார்

கேகயன் மாமகள்
கேழ்கிளர் பாதம்
தாயினும் அன்பொடு
தாழ்ந்து வணங்கி,
ஆயதன் அன்னை
அடித்துணை சூடி,
தூயசு மித்திரை
தாள்தொழு தோடும். 203

---

202. (திருமணத்தின்போது) மங்கல முரசுகள், சங்கங்கள், நான்கு வேத ஒலிகள், தேவர்களின் ஆரவாரம், பல கலை நிகழ்ச்சிகள், பல்லாண்டுப் பாடலிசை, வண்டுக் கூட்டங்களின் ஒலி எல்லாம் கடல் முழக்கம் போல எழுந்தன.

203. கேகயன் மாமகள் : கேகய மன்னன் மகளான கைகேயி. கேழ் கிளர் பாதம் : ஒளி மிகுந்த திருவடிகள். தாயினும் அன்பொடு: (தனது) தாயான கோசலைபால் உள்ள அன்பைக்காட்டிலும் மிக்க அன்புடன். வணங்கா : வணங்கி. ஆயதன் அன்னை : (பின்பு) அத்தகைய தன் நற்றாயான கோசலை. அடித்துணை : இரு பாதங்கள். தாள் : பாதம்.

## நல்மகனுக்கு நல் அணி

அன்னமும், அன்னவர்
அம்பொன் மலர்த்தாள்
சென்னி புனைந்தனள்;
சிந்தை உவந்தார்,
கன்னி, அருந்ததி
காரிகை, காணு
நல்மக னுக்குஇவள்
நல்அணி என்றார். 204

## பெண்கள் பிறர் யார் உளர்

சங்க வளைக்குயி
லைத்தழீ நின்றார்,
அம்கண னுக்குஉரி
யார்உளர் ஆவார்
பெண்கள் இனிப்பிறர்
யார்உளர்? என்றார்;
கண்கள் களிப்ப
மனங்கள் களிப்பார். 205

204. அன்னம் : அன்னம் போன்ற சீதை. அன்னவர் : கைகேயி, கோசலை, சுமித்திரை. சென்னி புனைந்தனள் : தலை பொருந்து மாறு வணங்கினள். சிந்தை உவந்தார் : (அம்மூவரும்) மன மகிழ்ந்தனர். கன்னி அருந்ததி காரிகை காணு : அருந்ததி போன்ற அவ்இளா மங்கையாகிய சீதையை நோக்கி. நல் மகனுக்கு : (நம்) திருமகனுக்கு. நல் அணி : நல்ல அணிகலம்.

205. சங்க வளைக் குயிலை : சங்கு வளைகளை அணிந்த குயில் போலும் மொழியினளான சீதையை. தழீ நின்றார் : தழுவி நின்றார். அம்கணன் : அழகிய திருக்கண்களையுடைய இராமன். உளர் ஆவார் : இருக்கப் போகிறார்கள். சீதையை (அம்மூவரும்) தழுவி. இராமபிரானுக்கு ஏற்ற துணைவி இவளைத் தவிர வேறு யார் என்று கூறி அகமகிழ்ந்தனர்.

## காசொடு தூசும் பெறுக

எண்இல கோடிபொன்,
எல்லைஇல் கோடி
வண்ண அருங்கலம்,
மங்கையர் வெள்ளம்,
கண்அகல் நாடுஉயர்
காசொடு தூசும்
பெண்ணின் அணங்குஅனை
யாள்பெறுக! என்றார். 206

## பள்ளி அணைந்தான்

நூற்கடல் அன்னவர்
சொற்கடன் நோக்கி,
மால்கடல் பொங்கும்
மனத்தவ ளோடும்
கார்க்கடல் போல்கரு-
ணைக்கடல், பண்டைப்
பாற்கடல் ஒப்பதுஓர்
பள்ளி அணைந்தான். 207

---

206. எண் இல கோடி : எண்ணற்ற கோடி. எல்லை இல் : அளவற்ற. வண்ண அருங்கலம் : அழகிய அணிகலன்கள். மங்கையர் வெள்ளம் : தோழிமார், சேடிமார் ஆகியோரின் கூட்டம். கண் அகல் நாடு : இடமகன்ற நாடுகள். உயர் காசொடு தூசு : இரத்தினங்களும் உயர் ஆடைகளும். பெண்ணின் அணங்கு : பெண்களின் தெய்வம் போன்ற சீதை. பெருமக்கள் மகிழ்ச்சிப் பரிசுகளைச் சீதைக்கு வாரி வழங்கினர்.

207. நூற்கடல் அன்னவர் : கடல் போல் பெருகியுள்ள நூற்களைக் கற்றுணர்ந்த அறிஞர்கள். சொற்கடன் நோக்கி : சொற்களை ஆராய்ந்து. மால் கடல் பொங்கும் மனத்தவள்: ஆசைக் கடலாக விளங்கும் சீதை. கார்க்கடல் : கருங்கடல். கருணைக் கடல் : கருணை சாகரமான இராமன். பண்டை : பழைய.

## வேட்கையின் மேற்பட ஈந்தான்

வேட்டுஅவர் வேட்டபின்,
வேந்தனும், மேல்நாள்
கூட்டிய சீர்த்தி
கொடுத்திலன் அல்லால்
ஈட்டிய மெய்ப்பொருள்
உள்ளன எல்லாம்
வேட்டவர் வேட்கையின்
மேற்பட ஈந்தான். 208

208. வேட்டு : விரும்பி. அவர் : இராமனும் அவன் தம்பியரும். வேட்டபின் : மணம் புரிந்துகொண்டபின். வேந்தனும் : சனக மன்னவனும். மேல் நாள் கூட்டிய சீர்த்தி : பல்லாண்டு காலமாகத் தான் சேர்த்த கீர்த்தி. கொடுத்திலன் : கொடுக்கக்கூடிய வகை இலன். ஈட்டிய : தேடிவைத்த. வேட்டவர் வேட்கையின் : விரும்பியோர் விரும்பியதைவிட. மேற்பட : அதிகமாக. ஈந்தான் : வழங்கினன்.



# பாட்டு முதற் குறிப்பு

| தொடர் எண் | பாட்டு முதல் | பாடல் எண் |
|---|---|---|
| 1 | அச்சு என | 171 |
| 2 | அந்தணர் | 196 |
| 3 | அந்தம் இல் | 25 |
| 4 | அமிழ் இமை | 151 |
| 5 | அயன் புதல்வன் | 68 |
| 6 | அரத்தம் | 141 |
| 7 | அருவலிய | 72 |
| 8 | அருள் இலாள் | 49 |
| 9 | அலை உருவ | 76 |
| 10 | அல்லினை வகுத்தது | 32 |
| 11 | அணையது ஓர் | 188 |
| 12 | அன்று முதல் | 90 |
| 13 | அன்னமும் | 204 |
| 14 | அன்னம் அரிதின் | 176 |
| 15 | அன்னவளை | 166 |
| 16 | ஆடகமால் | 99 |
| 17 | ஆண்டு, அங்கு | 40 |
| 18 | ஆதரித்து | 3 |
| 19 | ஆதித்தன் குல | 59 |
| 20 | ஆய்ந்து ஏற | 78 |
| 21 | ஆர்த்தன | 202 |
| 22 | ஆலம் உலகில் | 39 |
| 23 | இடம்படு | 199 |
| 24 | இந்திர நீலம் | 35 |
| 25 | இந்திரன் சசி | 193 |
| 26 | இமையவில் | 83 |
| 27 | இரதம் ஆண்டு | 191 |
| 28 | இருந்த குல | 58 |
| 29 | இருபிறப்பாளர் | 126 |
| 30 | இரும்பு அனைய | 87 |
| 31 | இலை முகப்படத்து | 121 |
| 32 | இழைகளும் | 20 |
| 33 | இழை குலாம் | 159 |
| 34 | இறைஞ்ச | 146 |
| 35 | இனிப்பரந்து | 185 |
| 36 | இன் உயிர்க்கும் | 64 |
| 37 | இன்னணம் | 186 |
| 38 | இன்னவாறு | 132 |
| 39 | ஈங்கு இவரால் | 75 |
| 40 | உக்கன | 84 |
| 41 | உமையாள் ஒக்கும் | 14 |
| 42 | உரைசெய | 150 |
| 43 | உரைசெய் | 116 |
| 44 | உழுகின்ற | 88 |
| 45 | உன்னு பேர் அன்பு | 135 |
| 46 | எங்கள் செய் | 167 |
| 47 | எஞ்சல் இல் | 190 |
| 48 | எண் அரிய | 55 |
| 49 | எண்ண-அரு | 21 |
| 50 | எண் இலகோடி | 206 |
| 51 | எய்தி | 131 |
| 52 | எய்வளைவில் | 172 |
| 53 | என்றனன் | 81 |
| 54 | என்று உரைத்து | 123 |
| 55 | ஏகும் நல்வழி | 52 |
| 56 | ஒழிந்த என் | 148 |
| 57 | கங்கை நீர் | 129 |
| 58 | கஞ்சத்து | 158 |
| 59 | கடலோ மழையோ | 38 |
| 60 | கடுகிய தூதரும் | 118 |
| 61 | கணங்குழை | 174 |
| 62 | கந்தையே | 130 |
| 63 | கம்பம் இல் | 30 |
| 64 | கயரத | 111 |
| 65 | கரங்கள் | 95 |
| 66 | கரிபவன் | 136 |
| 67 | கருங்கடை | 173 |
| 68 | கருதல் அரும் | 62 |
| 69 | கலித்தானை | 89 |
| 70 | கற்றை விரி | 164 |
| 71 | காணும் | 94 |
| 72 | காதொடும் | 29 |

# பாட்டு முதற் குறிப்பு

# பாட்டு முதற் குறிப்பு